*Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 2, itaḻ 2*

*September 16, 1921*

Record no. 148

உ

சிவமயம்.

தந்திவிலாசம்—"Oolian"    Regd. No. M. 1509.    "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் உ.    காரைக்குடி துன்மதி௵ புரட்டாசி௴ கஉ (கசு—கூ—ககூஉக)    இதழ் உ.

## நம் சமூகத்தாருக்கு செய்ய வேண்டிய உதவி என்ன?

அன்பிற்சிறந்த நண்புடையீர்!

நாட்டுக்கோட்டையார்களாகிய நம்மவர்கள் செல்வத்திலும் சிறப்பிலும் மிக உயர்ந்தவர்கள். அவர்களுக்கு வாலிபர்களாகிய நாம் இந்த சந்தர்ப்பத்தில் என்ன உதவி செய்யலாமென்று ஆலோசிப்பின், நமது சமூகமாகிய தேகத்தில் வியாபித்துள்ள விஷமயமாகிய கொடிய நோய்களையகற்றுதலே தக்க உதவியாகும் என்ற முடிவுக்கு வரலாம். நாம் வைத்தியர்களல்ல, என்றாலும், பிற வகுப்பார்களைப்போல காலஇயல்பை அறிந்து நடந்து கொள்ளக் கூடியதும், நாம் புராதனமாய்க் கைப்பற்றி மேன்மையடைந்து வந்து இடைக்காலத்தில் கைவிட்டு விட்ட நற் பழக்கங்களை நாம் ஒவ்வொருவரும் கைக் கொள்வதோடு வேறு பலர் அவ்வற்றைக் கைக் கொள்ளும்படித் தூண்டுதல் செய்தலுமாகும். நம்சமூகமோ செல்வச்சமூகம்; அச்செல்வம் இதுவரை நம்மவர்கட்கு விசேஷமாக உபயோகமாகா விட்டாலும், பிற ஜாதியார்களுக்குப் பலவழிகளில் பொருள் அபரிமிதமாய்ச் செலவிட்டு வரும் சமூகம். ஆனால் நமது சமூகத்தைத்தான் முழுவதும் திருத்திக் கொள்ள முற்படவில்லை. இச்சமயம் நாம் செல்வத்தால் உதவலாமென்று யோசிப்பின், அப்படியும் செய்யலாம்; நம்மிடம்இன்னுமுள்ள குறைகளை நம்மவர்கள் அறியும்படி எடுத்துச் சொல்லியும் நாமே கைக்கொண்டும் வரலாம். நம்மவர் முன்னேற்றமடைவதையே லக்ஷியமாகக் கொண்ட காரைக்குடி தனவைசிய ஊழிய சங்கத்தாருடன் சேர்ந்து உழைக்கலாம். அதற்காக நம் அறிவைச் செலவிடலாம். நம்சிந்தனை சிலகாலம் அவ் விஷயத்தைப் பற்றியதாகவே இருக்க வேண்டும். இதற்காகவே அறிவைச் செலவிடுவதோடு நம் பொருளை வேறு விஷயங்களுக்குச் சிலகாலம் செலவிடுவதில்லை என்றும் தீர்மானித்துக் கொள்ளவேண்டும். பலநாள் பெய்யும் மழையில் ஜலத்தைப் பெரிய நீர்நிலைகளில் தேக்கிவைத்துக் கொண்டு நஞ்சை நிலங்களுக்குப் பாய்ச்சி விவசாயம் செய்வதைப் போலப் பலருடையமுயற்சிகளைஒருமுகப்படுத்திச் சமூகமாகியநிலத்துக்குப்பாய்ச்சினால் பயிர்விளைந்து பலந்தரும். இதுவரை இவ்வாறு செய்ய நாம் சிறிதும் எண்ணவேஇல்லை. தாயார் திண்டாடத் தம்பி அன்னக்கொடி கட்டித் தானம்செய்வதால் யாது பயன்? முதன்மையாக நாம் கவனிக்க வேண்டியது நமது சமூக நலமேயாகும். நமது சமூகம் உன்னத நிலைமை அடைந்த பின் மற்ற விஷயங்களில் பொருளையும் அறிவையும் செலவிடுவோம். நாம் நமது சமூகத்தாருக்கு உத்தரவு செய்பவர்களாயிராது, அவர்கள் நன்மையைக் காட்டிய விஷயங்களையும் மகாநாட்டார் தீர்மானங்களையும் சிரமேற்கொண்டு ஏற்றுச் செய்யக் கூடிய ஊழியர்களாக இருப்போம். ஊழியமென்பது செய்ய முடியாதென்பதையும் செய்தல் எப்படியெனில், தனது ஆசிரமத்தில் இல்லாளுடன் வந்து தங்கி இருந்த ஒருவருக்குப் பாத்திரம் தேய்க்க ஆளில்லாததற்காகத் தன் மனைவியைக் கொண்டு அப்பாத்திரங்களை விடியுமுன் தேய்த்து வைக்கும்படி எப்படிச் செய்தாரோ மஹாத்மா, அப்படிப்பட்ட ஊழியம், ஓர்வீட்டின் கதவைத் தட்டிக்கொண்டேயிருந்தால், அந்தத் தொந்தரவுக்கு ஆற்றமலாவது வீட்டுக்காரர் கதவைத் திறப்பார். அப்பொழுது நம்காரியத்தை முடித்துக் கொள்ளலாம். தட்டிக்கொண்டேயிருந்தால் யாரும் எரிச்சல் படுவார்களென்று நாம் எண்ணலாகாது. தட்ட வேண்டியது நம்கடமை, எதற்காக நாம் தட்டுகிறோம்? நமது சமூகம் பெரிய கொள்ளிவாய்ப் பூதத்தின் வாய்ப்பட்டுவிட்டது? பஞ்சாயத்து சபைகள் ஏற்படாவிடின் இன்னும் முழுவதும் கிலப்பட்டு விடும். அங்ஙனம் நேரிடாமல் எச்சரிப்பதற்காகவே நாம் முயற்சிக்கிறோம். அதற்காகத் தானீச்வரன் நம்மை இந்தஉலகத்துக்கு அனுப்பி இருக்கிறார். நடமாடுங் கோவில்களில் வசிக்கும் தெய்வங்களின் அன்பை எவரெவர் இந்து பெறுகின்றார்களோ, அவர்களுக்குப் படமாடும் தெய்வமாகியக் கருணைக் கடலினருள் கிடைக்கும். பிரத்தியக்ஷமாய்க் காணும் தெய்வங்களிடம் கருணையும் விசுவாசமும் காட்டாதவர், கண்ணால் காண முடியாத மறை பொருளான தெய்வத்தைக் காணவோ அவர் அருளைப் பெறவோ செய்யும் முயற்சி அவ்வளவு பொருத்தமுள்ளதல்ல. அது போலிப் பக்தியேயாகும் ஈஸ்வரனுக்கு அன்புடையவரென்பதை அவர்கள் செய்யும் ஊழியமென்னும் உரைகல்லால் தான் தெரிந்துக் கொள்ளக் வேண்டும். சிறு கூட்டத்தாருக்கு உதவி செய்ய முடியாதவர்கள் பெரிய கூட்டாருக்கோ பெரிய விஷயத்துக்கோ உதவி செய்ய முடியுமா? அப்படிச் செய்தல் பயன் பெறுமா? என்பதை நன்கு ஆலோசிக்க வேண்டும். நீந்தக்கப்பழகுபவர் முதலில் ஆழமில்லாத தண்ணீரில் நீந்தியல்லவா பின்னர் ஆழமுள்ள தண்ணீரிடம் செல்ல வேண்டும். மேற்கண்ட விஷயங்களை மனதிருத்தி சமூக சேவையே நம் கடமையாகக் கொண்டு அறிதற்கரிய பெருமையுடைய நம் அறிவையும் நாம் அரும்பிரயாசையுடன் தேடிய செல்வத்தையும் நம் சமூகத்துக்கே பயன்படும்படி செய்வீர்களாக.

ச. பழனியப்பா
கடியாபட்டி.

# எனது ஆலோசனை.

சமூக வளர்ச்சியையும் நன்மையையும் உத்தேசித்து ஆனிமீ ஙகவ கோயிலூரிற் கூடிய நமது மஹாஜனங்கள் சில தீர்மானங்களைச் செய்தார்கள். சமூகத்தை முன்னுக்குக் கொண்டுவருவதற்கு இன்னும் பல தீர்மானங்கள் செய்தாலன்றி முடியாது. அதற்குப் பொதுக்கூட்டம் வருஷந்தோறும் நடைபெற வேண்டும். ஆயிரக்கணக்கான ஜனங்களைக் கூட்டி வைப்பதும் கூடுவதும் வகை செய்வதும் மனஸ்தாபமில்லாமல் முடிவு பெறுவதும் சுலபமான காரியமல்ல. முதல் வருஷத்தில் சமூகம் தன் ஸ்வரூபத்தோடுங்கூடியது நிரம்பவும் சந்தோஷமான காரியம். இனி அதைச்சுலபமான முறையிற்கூடும்படி ஒரு திட்டஞ் செய்து கொள்வதுதான் நல்ல பலனைத் தரக்கூடியதாக இருக்கும்.

அதற்குத் தனவைசிய பொதுச்சங்கம்என்றாவது தொண்ணூற்றொருரார்க் கூட்டம் என்றாவது பெயரிட்டு ஒரு சங்கம் ஸ்தாபிக்க வேண்டும். அதன் தலைமை ஸ்தானம் கோயிலூராகவே இருக்கவேண்டும். அச்சங்கம் நூற்றொரு அங்கத்தினரைப் பெற்றதாக இருக்கவேண்டும். நூற்றொருவருள் நம்மவர் வசிக்கிற ஒவ்வொரு ஊருக்கும் ஒவ்வொருவராக எழுபத்தேழு பிரதிநிதிகளும் மற்றவர் அவ்வெழுபத்தெழுவராற் றெரிந்தெடுக்கப்பட்ட காரியஸ்தர்களாகவுமிருக்க வேண்டும். அக்காரியஸ்தர்களை நகரத்தாரின் மந்திரிமார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அம்மந்திரிமார்கள் ஊர் கோயில் முதலிய காரணம் பற்றியிராமல், திறமையும் ஊக்கமும் சிரத்தையுமுள்ளவர்களாகத் தெரிந்தெடுக்க வேண்டும். அரசாங்கத்தாரின் சட்ட திட்டங்கட்குதவியாக ஒருவரும், சாஸ்திரசம்மதமான ஆலோசனை சொல்வதற்கொருவரும், தனவைசிய ஊழியர் சங்கத்தின் சார்பாக ஒருவரும், வாலிபர் சங்கத்தின் சார்பாக ஒருவரும் அதிற் கலந்திருக்கவேண்டும். எல்லாவற்றையும் சரிப்படுத்திக்கொண்டு காரியத்தை முடிக்கத்தக்க திறமையுள்ள ஒருவர் தலைவராகவும் வேண்டும். மற்றபடி ஆங்காங்கு பொறுக்கியெடுத்து இருபத்து நான்கு மந்திரிமார்களையும் நியமித்துக் கொள்ளவேண்டும்.

தீர்மானிக்க வேண்டிய விஷயங்களை ஒருமாத முன்னரே அச்சிட்டு ஒவ்வொரு ஊருக்குமனுப்பிஜனசமூகத்தின் ஆலோசனைக்கு அவகாசங் கொடுக்க வேண்டும். அந்தந்த ஊரிலும் நகரத்தார்கூடி ஆலோசித்து அபிப்பிராய பேதமுண்டானால், புள்ளிக்கு ஒரு சம்மதச்சீட்டுப் பெற்று மெஜாரிட்டுக்கு முடிவுசெய்து முடிவான அபிப்பிராயத்தைத் தங்கள் பிரதிநிதி மூலமாகப் பொதுக்கூட்டத்தாருக்குத் தெரிவிக்க வேண்டும். பிரதிநிதிகளும் மந்திரிமார்களும் குறிப்பிட்ட தினத்திற்கூடி ஒவ்வொரு ஊர்த்தீர்மானத்தையும் பார்த்து முடிவுசெய்ய வேண்டும். அதில் அபிப்பிராய பேதமிருந்தாலும் மந்திரிமார்களும் சம்மதச் சீட்டுகொடுத்து மெஜாரிடிக்கு முடிவு புகட்டிவிடவேண்டும். இந்த முறையிற் பொதுக்கூட்டம் கூட்டினால் நிரம்ப சுலபமாக இருக்குமென்பதும் செய்யத்தக்கதைச் சுலபமாகச் செய்து முடிக்கலாமென்பதும் எனது ஆலோசனை.

இதன் செலவுக்கு ஒருவரிருவர் பொருள் கொடுப்பதென்பது வேண்டாம். புள்ளிக்கு மூன்று அல்லது ஐந்து ரூபாய் வாங்கி அதை மூலதனமாக வைத்துக் கொண்டாற் போதும். வருஷந்தோறும் நடந்த விஷயங்களையும் தீர்மானங்களையும் புத்தகமாக அச்சிட்டுப் புள்ளிக்கொன்று கொடுத்துவிட வேண்டும். கூட்டி வைப்பது-தீர்மானங்களைத் தயார் செய்வது முதலிய காரியங்கட்குரிய உதவிகளைத்தனவைசிய ஊழியர் சங்கத்தாரும் தீர்மானங்கள் ஆங்காங்கு வழுவுறாமல் நடைபெறுகின்றனவாவென்று கண்காணித்துக் கொள்ளுமுதவியை வாலிபர் சங்கத்தாரும் செய்யவேண்டும்.

இதுதான் எனது ஆலோசனை. இதை எனது சகோதரர்கள் நன்காராய்ந்து தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை ஊழியனில் வெளியிட விரும்புகிறேன்.

M. சின்னையா செட்டி.

---

## ஆ. முத்துப்பட்டணம்.

இவ்வூரில் நாளிதுமீ கருஉ செவ்வாய்க்கிழமை பிற்பகல் நான்கு மணிக்கு ஸ்ரீ லோகநாயகி வாசகசாலையின் சார்பில் ஸ்ரீமான் அள. மு. காசி விஸ்வநாதன் செட்டியாரவர்கள் அக்ராசனத்தில் ஸ்ரீமான்களான பி. சித. நாச்சியப்ப செட்டியாரவர்கள் "நாட்டுக்கோட்டையார் என்னும் பெயர்வரலாறு" என்பதைப்பற்றியும், சி. மு. சு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் "தந்தை தாய்களுக்கு ஓர் வேண்டுகோள்" என்பதைப்பற்றியும், சி. சு. நா. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் "நமது நாட்டுத் தபால்வசதி" என்பதைப்பற்றியும், மாணவர் சித. நா. நாச்சியப்பன் "உலோபியின்சரித்திரம்" என்னும் விஷயத்தைப் பற்றியும், ர. ம. அழ. அருணாசலம்செட்டியாரவர்கள் "பத்திரிகை படித்தல்" என்னும் விஷயத்தைப் பற்றியும் பிரசங்கம் செய்தார்கள். பின்னர், தலைவரவர்கள் முடிவுரை கூற, ரா. அள. அருணாசலம் செட்டியாரவர்கள் வாழ்த்துக் கூற சபை இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

## கண்டவராயன்பட்டியும் ரோட்டும்.

இவ்வூரைச் சுற்றி நான்கு புறத்திலும் நதியும் கால்வாய்களுமாகவிருப்பதால், மழைகாலத்தில் ஜனங்களும் வண்டிகளும் கால்நடைப் பிராணிகளும் மோட்டார்கார்களும் போய் வர மிகக் கஷ்டமாக விருக்கிறது. அதில் தனவைசிய சிகாமணிகள் சிரத்தையெடுத்துக் கொள்ளாதிருக்கலாகுமா? ரோட்டுகளிருந்தால் மிக வசதியாகயிருக்குமென்பது யாவரும் அறிந்த விஷயம். மோட்டார்கார்கள் திருப்பத்தூரிலிருந்து மூன்று மைலோடு இங்கு வந்து சேர்வதற்கு நத்தம் ரோட்டு மூலம் ஆ. தெற்கூர் மார்க்கமாகப் பனிரெண்டுமைல் சுற்றிவர வேண்டியிருக்கிறது. நேரே ரோட்டிருக்குமானால் சுலபமாகஇருக்குமல்லவா? மழைகாலத்தில் மழை மிகுதியால் வெள்ளப் பெருக்கதிகரிப்பது சகஜமாயிருப்பதோடு, சென்ற வருஷம் கார்த்திகைமீ புதுமை சமயத்தில் மிகுந்த மழை வருஷித்ததால், நதிகளிலும் கால்வாய்களிலும் தண்ணீர் ஏகப்பிரளயமாய்ச்சென்று கொண்டிருந்தது. இவ்வூரிலுள்ளவர்கள் அடுத்த ஊர்களுக்குச்செல்ல முடியாமலும் அவ்வூரார்கள் இங்கு வரமுடியாமலும் ௬ நாட்கள் வரை மிகச் சிரமத்தை அடைந்தது குறிப்பிடத்தக்கது. ஆ. தெற்கூர் ஸ்ரீமான் கரு. முதது. அவர்கள்சுகாதார தர்மத்தைக்கருதி நத்தம்ரோட்டிலிருந்து தொடர்ந்து, ஆ. தெற்கூர் மார்க்கம் இவ்வூர் வரை ரோட்டுப் போட்டிருக்கிறார்கள். ஸ்ரீமான் செட்டியாரவர்கள் குடும்பத்தாருக்கு மனப்பூர்வமான வந்தனத்தைச் செலுத்துகின்றோம். இவ்வூரிலிருந்து திருப்புத்தூர் ரோட்டுப் போடுவதற்கு நம் தனவைசிய குலத்திற் பிறந்த தர்மவான்களாகிய தனவந்தர்கள் மிக்கமுயற்சி எடுத்து விரைவில் போட்டு முடிப்பிக்க முன்வருவார்களானால், ஜனங்களுக்கும் கால்நடைப் பிராணிகளுக்கும் வண்டி மோட்டார்கார்களுக்கும் நிரம்ப சௌகர்யமாயிருக்கும். நம் நாட்டில் சுகாதார தர்மத்தையும் பரோபகாரத்தையும்கருதிஒவ்வொரு சிற்றூர்களிலிருந்தும் ரோட்டுகள் போட்டு வசதிசெய்து வருகிறார்கள். "அறஞ்செயவிரும்பு" என்ற ஔவை வாக்கியப்படி தர்மத்தைச் செய்ய வேண்டியது தனவந்தர்களின் கடமையாகையாலும், இத்தருமமானது நீடூழிகாலம் வாழ்த்தக் கூடியதாகையாலும், இதற்கு முன்னின்று முடிப்பிக்க வரும் கனவான்களுக்கு மரகத விநாயகர் திருவருள் புரிவாராக.

ஒரு நிருபர்.



## கூட்டுறவுமுறையில் பண்டகசாலை.

நமக்கு வேண்டியபண்டம் பலாதிகளைச் சேகரித்து அவற்றை லாபத்துடன் ஒரு நிதானமான விலைக்கு நம்மவர்களுக்குக் கொடுக்கக்கூடிய பண்டகசாலைகளை ஏற்படுத்துவது நல்லது. நம் நாட்டுச்சாமான்கள் இப்பொழுதுதான் கொஞ்சம் ஜாஸ்தியாய் வெளிப்பட்டு வருகிறதெனினும், அன்னிய தேசச்சாமான்களையே நாம் மிகுதியாய் வாங்குகிறோம். இந்த வழக்கத்தை இயன்றவரை மாற்றி விலை சிறிது ஜாஸ்தியாயிருந்தாலும், நமது தேசத்தில் செய்யப்பட்ட சாமான்களையே வாங்கவேண்டும். யந்திரத்தினால் செய்யப்படும் சாமான்கள் சீக்கிரம் கெட்டுவிடும். கைவேலைச்சாமான்கள் அப்படிச்சீக்கிரம் கெட்டுப்போகா. நமக்கு ஒரு சாமான் வேண்டுமானால், இப்பொழுது அதற்காக இதர வகுப்பார் கடைக்குச் செல்லவேண்டியிருக்கின்றது. பாமாவைபோன்ற பிரதேசங்களில் சாமான்வாங்கவேண்டுமானால் நாம் கடைத்தெருவுக்குத்தான்போக வேண்டியிருக்கிறது. அங்கு அநேகமாய் நம்மைக்கண்டவுடனே விலை கொஞ்சம் உயர்ந்துவிடுவதுண்டு. கடைக்காரர் சொல்லுகிற விலையைக் கொடுத்துத்தான் தீரவேண்டும். ஏதாவது ஒரு சாமானை விலைகேட்டு எடுக்காதபோனால் கடைக்காரன் உடனே மடியைப்பிடித்து இழுத்தல், அகௌரவமான வசனப்பிரயோகம் செய்தல் முதலிய உபசாரணைகளை ஆரம்பித்துவிடுகிறான். ஏன்? நாம் பயந்தவர்கள் சொன்ன விலையைக் கொடுத்து எப்படியும் வாங்கிக்கொண்டு போவோமென்று எண்ணியேதான். உணவுப்பொருள்களும் அப்படியே ஒரு சமயத்திலிருந்ததுபோல எந்நாளுமிருப்பதில்லை. விலைகுறைந்திருக்கவில்லையெனினும் வரவர உயர்ந்து கொண்டிருக்கிறது. வியாபாரத்தை கேவலமாக மதித்திருந்த அநேகர் யுத்த சந்தர்ப்பத்தில் அவ்வெண்ணத்தை மாற்றிக்கொண்டிருக்கக்கூடும். நகரத்தார்களுக்கென அநேக இடங்களில் பல பண்டகசாலைகளிருந்தால் அதனால் எவ்வளவோ கௌரவமுண்டு. சகாயமாய்க்கிடைக்கக்கூடிய இடங்களிலிருந்து சாமான்கள் வரவழைத்து நம்மவர்களுக்குச்சரசமான விலைக்குக்கொடுக்கலாம். திரைகடல் தாண்டி பாஷைவிளங்காத அந்நிய நாடுகளுக்குச்சென்று வட்டித்தொழில்செய்து சம்பாதிப்பவர்கள் இம்முறை புதிதென்றும் சங்கடமானதென்றும் எண்ணமாட்டார்கள். வைசியர்கள் என்றால் ஜனங்களுக்கு வேண்டிய உணவுப்பொருள்களையும் மற்ற சரக்குகளையும் சேகரித்து நிதானவிலைக்குக் கொடுப்பவர்களேயாவர். சொற்ப தொழிலாளர்கள் ஒன்றுசேர்ந்து கூட்டுறவுமுறையில் பண்டகசாலைகள் பல ஸ்தாபித்து நடத்திவருகையில்நம்மைப்போன்றோர் அவ்வாறு பண்டகசாலை ஸ்தாபிப்பதும் அவற்றை அபிவிருத்திசெய்வதும் வெகுசுலபம். அதனால் தக்க லாபமும் கிடைக்கும். இலங்கையில் நம்மவர்கள் பலர் வியாபாரத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள். அதுபோல பர்மாவிலும் மலேயாவிலும் ஜாஸ்தியாய் இல்லாமை பெரிதும் விசனிக்கதக்கது. "இந்து" பத்திரிகையின் ஆசிரியர் லண்டன்போய்த் திரும்பி வந்தசமயத்தில் இலங்கையில் நம்மவர்கள் செய்யமுற்பட்டுள்ள வர்த்தக முறையைப் பற்றி மிகவும் வியந்து எழுதியிருந்தார்.

உலகத்தை வசப்படுத்தும் பொருளாகிய காந்தத்தை வைத்துக் கொண்டு நாம் எதற்காக யோசிக்க வேண்டும். அன்னிய தேசத்தார் எவ்வளவு பொருளாளரா யிருந்தாலும் கூட்டுறவு முறையில் ரயில்வே கம்பெனி கப்பல்கம்பெனி முதலிய கம்பெனிகளை ஏற்படுத்தி நடத்துகிறார்கள். அவர்களுக்குப் பெயரும் கீர்த்தியும் பெருத்தலாபமும் கிடைக்கின்றன. இதர வகுப்பாரை நம்பி ஒரு அணா ஸ்டாம்பு ஆதாரத்தில் வட்டிக்குக் கொடுப்பதைப்போல் நமது சுயஜாதியாரை நாம் பொது விஷயங்களில் நம்ப வேண்டும். நமது சமூக சகோதரரிடம் நம்பிக்கை வைத்தால் தான் இந்தக் கூட்டுறவு முறை அபிவிருத்தியடையும். மற்றவர்கள் ஏற்பனவே இம்முறையில் தொழில்கள் ஆரம்பித்து லாபமடைந்து வருகிறார்கள். நம்மவர்கள் அதனை அறிந்திருந்தும் அறியாதவர்கள் போல பராமுகமாயிருப்பதேனோ? சுப்பிரமணியப்பா

கடியாபட்டி.

---

## இந்தியவாலிபர் சங்கம் கொழும்பு.

ச—கூ—உக ல் இவ்வூர் 'இந்தியவாலிபர்சங்கத்தில்' ஸ்ரீமான் வ. ராம. வ. அ. லெட்சுமணன் செட்டியாரவர்கள் அக்கிராசனத்தில் ஸ்ரீமான் ராம. நடராஜன் செட்டியாரவர்கள் "பெண்கல்வி" என்ற விஷயமாய் அரியதோர் வியாசம் எழுதி வாசித்தார்கள். அதை ஆதரித்து திருமான் சித. நாகலிங்கம் பிள்ளையவர்களும் ஸ்ரீமான் வி. காசிவிஸ்வநாத பிள்ளையவர்களும் வெகு விரிவாய் பேசினார்கள். பின் சொ. பழனியப்பா அவர்கள் வேந்தன்பட்டி "திருவள்ளுவர் வாசகசாலை" உபகாரியதரிசி நா. சோம. சோமசுந்தரம் செட்டியார் சங்கத்துக்கு எழுதியனுப்பியுள்ள, வாழ்த்துப்பாவை வாசித்தார்கள். பின் அக்கிராசனாதிபதியவர்கள் அதற்கு நன்றி கூறி முடிவுரையும்சொல்லியமர்ந்தார்கள். அது சமயம் பாடகச்சேரி "ராமலிங்க சுவாமிகள்" எழுந்தருளி சில இதோபதேசம் செய்து உபந்நியாசம் நடக்கும்போது சபையோர் கரகோஷம் செய்தல்கூடாதென்றும் அதற்கு பதிலாக 'அரகரமகாதேவ' என்று கோஷிக்க வேண்டுமென்றும் உபதேசித்தார்கள். அப்படியே செய்வதாய் சங்கத்தின் உப அக்ராசனர் திருமான் வே. மீனாக்ஷிசுந்தரம் அவர்கள் வாக்களித்தார்கள்.

பின் ஷை சுவாமிகளின் திருவுருவப்படம் ஒன்று சங்கத்தில் வைக்க வேண்டுமென்று சங்கத்தின் நிர்வாக அங்கத்தினர் ஸ்ரீமான் பழ. வினைதீர்த்தான் செட்டியாரவர்கள் கேட்டுக் கொள்ள எல்லோரும் அதை அங்கீகரித்தார்கள்.

சோம. சுப்பிரமணியன்
காரியதரிசி.

---

## தனவைசியப் பிரபுக்களுக்கு ஓர் வேண்டுகோள்

நம்மவர்கள் தென் இந்தியாவிலும் பர்மா மலாய் நாடுகளிலும் வட்டி வியாபாரம் நெடுநாளாகச் செய்து தேர்ச்சி பெற்றிருந்தும் இம்பீரியல் பாங்க் இந்தியன பாங்க் முதலானவைகளைப் போல நம் சமூகத்தின் பெயரால் ஓர்பாங்க் ஏற்படுத்திக் கௌரவமும் லாபமும் அடையாதிருப்பது கவனிக்க வேண்டியவைகளிலொன்று.

நம் ஜாதியாரின் முன்னேற்றத்திற்காக மதராஸ் இரங்கூன் கொழும்பு பினாங்கு இந்த நான்கு ஊர்களிலும் ஏற்படுத்தி, "நாட்டுக்கோட்டையார் பாங்க் லிமிடெட்" என்று பெயர் வைத்து, பங்குக்கு நூறு அல்லது இருநூறு ஏற்படுத்தி அல்லது பங்குகள்சேர்த்து அறுபது அல்லது எழுபத்துஐந்துலக்ஷம்ரூபா மூலதனம் வைத்து மதராசில் தலைமை பாங்காகவும் மற்றவை கிளை பாங்காகவும் ஏற்படுத்தி இம்பீரியல்பாங்க்போல வியாபாரம் நடத்தினால், பாங்கிக்கு ஏராளமான லாபமும் நம் சமூகத்திற்குக் கௌரவமும் நன்மையும் ஏற்படும். நம்மவர்கள் பல பாங்கிகளில் வியாபாரம் செய்வதினின்றும் இதில் வியாபாரம் செய்வார்கள். அதினால் பங்குக்காரர்கள் நல்ல லாபமடையலாம். இதை ஏற்படுத்தவும் ஏராளமான பங்குகள் வாங்கவும் நம் தனவைசியப் பிரபுக்கள் சீக்கிரம் முயற்சியுடன் முன் வரும்படியாக நங்குல தெய்வமாகிய ஸ்ரீ ஷண்முகப்பெருமானை அருள்புரியுமாறு பிரார்த்திக்கிறேன்.

சோ. காசிநாதன். கொடுமுடி.

# அரசியற் பகுதி.

## புராதன இந்திய ராஜாங்கம்.

நமது இந்திய தேசத்துப்புராதனமான அரசு முறையைப்பற்றி யாராயப் புகும் போது, நமக்கு வேதங்களும் அவற்றின் அங்கங்களும் ஆதாரங்களாக இருக்கின்றன. நம் பூர்விகர்கள் பெரும்பாலும் அரசர்களாலேயே ஆளப்பட்டு வந்தார்களென்றும், சிற்சிலசமயங்களில்இவற்றுக்கு விலக்குகள் ஏற்பட்டிருந்தன வென்றும் தெரிகிறது. ஒரு குடும்பத்தின் தலைவனே அதற்கு அதிகாரியாக இருப்பது போல ராஜரீக முறை இருந்ததாகத்தெரியவில்லை. இது வேதத்திற் சொல்லப்படும் ராஜரீக முறைக்கு ஒத்துவாவில்லை. ஆனால், ஏகாதிபத்ய முறைமை மாத்திரம் பிதா புத்ரக்ரமமாய் ஒரு வம்சத்தின் பாம்பரையை யொட்டிவந்ததாகத் தெரிய வருகின்றது. சதபத ப்ராஹ்மணம் ஐதரேய ப்ராஹ்மணங்களில் இது விளங்குகின்றது. ஆனால், அரசபரம்பரை க்ஷீணிக்கும் காலத்தில் அதாவது ஒரு அரசன் புத்திரனில்லாதவனாக விருந்தால் அந்தந்தக்காலங்களில், ஜனங்களால் தெரிந்து எடுக்கப்பட்டதாகவும் சிற்சில இடங்களில் தோன்றுகிறது. இதற்குத்த தந்தவர்கள், அரசனுடைய வம்சத் தவர்கள் தானா மேற்குலத்தவர்களா படிப்புடையவர்களா ஜனமதிப் புடையவர்களா வீரர்களா என்று நிர்ணயிக்கத்தகுந்த ஆதாரங்கள் பலமாகக் கிடைக்கவில்லை. ஆனால், தெரிந்தெடுக்கும் சுதந்தர மாகாண ஜனங்களுக்கும் அவற்றின் உட்பிரிவின் ஜனங்கட்கும் உண்டென்று ரிக்வேதமும் அதர்வ வேதமும் சூசிப்பிக்கின்றன. இதனால் அரசனைத் தெரிந்தெடுக்கும் முறையும் பூர்விகர் முறையேயென்பது கொள்ளக் கிடக்கின்றது.

ஒரு ராஜ வம்சத்தில் பரம்பரைக் கிரமப்படி ஒருவனுக்குப் பட்டம் கிடைக்க வேண்டியிருந்தும், அவனுக்குத் தகுந்த யோக்கியதை இல்லாவிடின், அந்தந்த வம்சத்தைச் சேர்ந்துள்ள நற்குண நற்செய்கைகள் வாய்ந்துள்ள ஒருவனை அரசனுப்த் தெரிந்தெடுப்பதுண்டு. பட்டத்துக்குரியவன் தகாத காரியங்களைச்செய்ய முற்படுவானானால் அவனை விலக்குவதற்கும் தகுதியுள்ள ஒருவனைத்தெரிந்தெடுப்பதற்கும் ஜனங்கட்கு அதிகாரமிருந்ததென்றும் நன்றாய்த்தெரிகிறது இதற்குஉதாரணமாகப் பலசரித்திரங்கள் காணப்பெறுகின்றன. அரசர்கள், இக்காரணங்களால் அடிக்கடி தங்கள் பதவியையிழந்து விட நேர்ந்ததென்றும், மறுபடியும் அவற்றை யடைவதற்குப் பிரயத்தனங்கள் செய்தார்களென்றும், தாங்கள் ஸ்திரமாயிருப்பதற்கும் சத்ருக்களால் ஜயிக்கப்படாமலிருப்பதற்கும் அநேக மந்திரங்களை யுபயோகித்து வந்தார்களென்றும், அதர்வ வேதம் காடகஸம்ஹிதை தைத்திரிய ஸம்ஹிதை மைத்ராயணி ஸம்ஹிதை பஞ்சவிம்ச ப்ராஹ்மணம் சதபத ப்ராஹ்மணம் கௌசிக ஸூத்ரம் முதலிய இடங்களில் விவாமாய்த் தெரிகின்றது.

அரசனுடைய யுக்தசம்பந்தமான விஷயங்களைப்பற்றி ரிக்வேதம் மிகத்தெளிவாய்ச் சொல்லிப்போகிறது. அரசர்கள் பனிக்காலத்தில் சத்ருக்களின்மேல் படையெடுத்துப்போவதே ராஜ தர்மமாகுமென்று தைத்திரிய ப்ராஹ்மணம் வற்புறுத்திச்செல்லுகிறது. யுத்தத்தில் கிடைத்த பொருள்களில் அரசர்களும் பாகம்பெற்று வந்தார்களென்றும் ப்ராஹ்மணர்கள் யாகஎக்ஞங்களை நடத்திவந்ததுபோல் அரசர்களும் ராஜ்யபாரம் யுக்தம் முதலியவற்றைக் குறைவற நடத்திவந்தார்களென்றும் தெரிகிறது. பிரஜைகளை சத்ரு அரசன்வந்து வருத்தாமல் அரசன் கண்ணுங்கருத்துமாய்க் காத்துவந்தானென்று நன்கு தெரிகிறது. இதனால் அவனுக்கு "நிருபன்" என்றும் "ஜனஸ்யகோபா" என்றும் பெயர் வந்திருக்கின்றன. அரசனுக்குயுத்தத்தில்ஜயமுண்டாகும்படியாக அவனது ரதங்களையும் குதிரைகளையும் ஆயுதங்களையும் தேகத்தையும் சத்ருக்கள் அறிக்காதபடி அவனது புரோஹிதர்கள் மந்திரபலத்தால் காத்துரக்ஷித்திருக்கிறார்கள். அரசர்களை நேரில்நின்று யுத்தஞ்செய்திருக்கிறார்களென்று பல உதாரணங்களால் வெளியாகின்றது. யுத்தகாலங்களில் அரசன் ஜனங்களுக்குச் செய்துவரும் உபகாரத்திற்காக அவர்கள்அவனுக்குக் கீழ்ப்படிந்திருக்க நேர்ந்திருக்கிறதென்றும் அப்படியல்லாவிடில் அவன் கட்டாயப்படுத்தியும் ஆண்டிருக்கிறானென்றும் சிற்சில இடங்களில் காணப்படுகின்றன. இதனை பிருஹதாரண்யம் மைத்ராயணி தைத்ரீயம்ரிக் வேதம் முதலியவை காட்டிச்செல்கின்றன.

அரசன் தன்னுடைய கௌரவத்தையும் வாழ்வையும் காப்பாற்றிக்கொள்வதற்காக ஜனங்கள் அவனுக்குக் கப்பங்கட்டி வந்திருக்கிறார்களென்றும், அவனது பரிவாரங்களையும் வரிகளால் போஷித்துவந்திருக்கிறார்களென்றும் தெரிகிறது. ஜனங்களாற் போஷிக்கப்பட்ட அதிகாரவதுப்பினரே பிற்காலத்தில் பிரபுக்களென்று அழைக்கப்பட்டார்களென்று ஊஹிக்கப்படுகிறது. அரசனுடைய அதிகாரத்துக்கு ஆகாரமும்பலமும் ஜனங்களுடையக்ஷேம வாழ்வுதானென்றுமைத்ராயணிஸம்ஹிதை நன்றாய்ச்சொல்கிறது. தைத்திரீயப்ராஹ்மணமும் சதபதப்ராஹ்மணமும் இதனை வற்புறுத்தாமற்போகவில்லை. அரசன்நியாயாதிபதியாய்வீற்றிருந்து ஜனங்களுக்குள் உண்டாகும்வழக்குகளைத்தீர்த்துவந்தானென்றும்,குற்றம்செய்தவர்களைத்தண்டிக்கும் அதிகாரமும் செலுத்திவந்தானென்றும், சில வேளைகளில் ராஜ்ய உத்தியோகஸ்தர்களையாவது வேறு பிரபுக்களையாவது தனக்குப் பிரதிநிதியாக இருந்து ஞாயமும் தண்டனையும் செலுத்தும்படி ஏற்படுத்தி யிருக்கிறானென்றும் கௌதம தர்மஸூத்ரம் காடகப்ராஹ்மணம் சதபத பாராஹ்மணம் முதலியவை குறிக்கின்றன. பொருள்களைப்பற்றிய விவகாரங்களில் அரசன் நேராய் விசாரணைசெய்திருக்கிறானென்று சொல்வதற்கு விசேஷப்பிரமாணங்கள் அகப்படவில்லை. ஆனால் வேறு நியாதிபதிகள்மூலமாக அவற்றைச்செய்து வந்ததாகத்தெரிகிறது. இத்தகைய அதிகாரிகளை மத்யஸ்தர் என்று அழைப்பது முறையாயிருந்தது. குற்றசம்பந்தமான அதிகாரங்களையே அரசர் நேரில் வகித்திருந்தார்களென்று நன்றாய் விளங்குகிறது. இவற்றை ரிக்வேதம் அதர்வவேதங்கள் குறித்துச்செல்கின்றன. சட்டங்களைச்செய்யும் அதிகாரம் அரசனுக்கு இருந்ததாகப் புராதன நூல்களிற் சொல்லப்படவேஇல்லை. ஆனால் பிற்காலத்தில் அரசனும் அதிற்சம்பந்தம் பெற்றதாகத் தெரிகின்றது. தான் செய்யும் எல்லா விவகாரங்களிலும் அரசன் தன்புரோகிதர்களையும் மந்திரிகளையும் சில விஷயங்களில் மற்ற அதிகாரிகளையும் உடன்வைத்துக்கொண்டு செய்திருக்கிறானென்று தெரிகிறது. அரசனால் ஏற்படுத்தப்பட்ட கிராமணிகள் அல்லது கிராமாதிகாரிகள் என்பாரே ராஜ்யத்தின் சிறுபாகங்களின் அதிகாரிகளாக இருந்தார்களென்று தெரிகிறது. அரசனுடைய அரண்மனையும் விலைமதிக்கப்பெற்ற ஆடைகளும் ஆபரணங்களுமே அவனது அதிகாரத்தையும் கௌரவத்தையும் அலங்கரித்து காட்டிக் கொண்டிருந்தன. அரசனுக்கும் தேசத்திலுள்ள நிலங்கட்கும் எவ்விதமான ஸம்பந்தமும் இருந்ததாகத் தெரியவில்லை ஆனால் ஜனங்களை ரக்ஷிப்பதற்காக அவர்களிடமிருந்து நிலவரி வசூல் செய்தானென்று நன்றாய் விளங்குகிறது. அவிபக்த குடும்பங்களும் தனிமனிதரும் நிலங்கட்கு சொந்தக்காரர்களாயிருந்திருக்கிறார்களென்றும் தெரிகிறது. ஆனால் பிற்காலத்தில் நிலங்களின் சொந்தக்காரனாகவும் அரசன் இருந்ததாகச் சில பிரமாணங்கள் குறிக்கின்றன. இந்த முறைமை ஆதிகாலத்திலிருந்தே ஏற்படாமல் வெகுபிற்பட்டகாலத்தில் உண்டாயிற்றென்று மேதாவிகள் குறிக்கிறார்கள். அரசனுக்கு ராஜீக அதிகாரங்களே பூர்ணபாத்தியத்துடன் உண்டென்பதையும் அவற்றை அரசன் சில சமயங்களில் வேறு சிலர்க்கு மாற்றியும் கொடுத்திருக்கின்றான் என்பதையும் புராதன நூல்கள் வற்புறுத்துகின்றன. ஆனால் நிலங்கட்கு ஸ்வதந்திராதிகாரத்தை அரசன் பெற்றிருந்தானென்பதற்குப் போதிய ஆதாரங்கள் கிடைக்கப்பெறவில்லை. அரசன் நிலங்கட்கும் சொந்தக்காரன் என்பது ஐரோப்பிய முறையேயாகும். அங்கும் கிரீஸ்தேசத்தில் ஹோமருடைய காலத்திலாவது இங்கிலாந்துதேசத்தில் ஆங்கிலோஸாக்ஸன் காலத்திலாவது அரசனுக்கு நிலஸ்வதந்தரம் இருந்ததாகவிளங்கவில்லை. இதனைப்பின்னர் ஆராய்வோம்.



## மகாத்மாவின் பிறந்த தினம்.

ஸ்ரீமான்களான ஸி. ஆர். தாஸ், ராஜேந்திர ப்ரஸாத் லாலா லஜபதிராய், பண்டிதமதிலால் நேரு, மௌலானா அப்துல் கலாம், அஸத் மௌலானா முகம்மத் அலி ஆகியவர்களின் கையொப்பத்துடன், "மஹாத்மாவின் ருஙு-வது பிறந்தினத்தைக் கொண்டாட வேண்டுமென்றும், அன்று அந்நிய நாட்டு ஆடைகளை அக்கினிக் கடவுளுக்குக் கொடுக்க வேண்டுமென்றும், ஆகையால் அன்னிய நாட்டுத் துணிகளைச் சேகரிக்கும் வேலையில் இறங்கவேண்டுமென்றும்" குறிப்பிட்டு விளம்பரங்கள் வெளியிட்டிருக்கிறார்கள். மகாத்மாவின் பிறந்த தினம் இந்தக்கிழமைதானென்று பின்னர் தெரிவிக்கப்பெறும்.

## காந்தி தொண்டர் படை.

காந்தி தொண்டர் படையில் சேருவதற்கு நூற்றுக் கணக்கானவர்கள் விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். தெரிந்தெடுக்கப்பட்டவர்களின் ஜாப்தா சீக்கிரம் வெளியிடப்பெறும். தொண்டர்களின் உடுப்புக்கள் முதலிய விவரங்கள் பிறகுதான் தெரிவிக்க முடியும். காங்கிரஸ் பிரசாரத்தில், அமைதியையும் அஹிம்சையையும் நிலைநிறுத்துவதே இப்படையின்நோக்கமாகும். இம்மாதம் கஙு முதல் தமிழ்நாட்டில் மகாத்மா காந்தி சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறபடியால், விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிற தொண்டர்கள் தங்கள் ஊரிலோ, அல்லது மகாத்மா விஜயம் செய்கிற பக்கத்து ஊர்களிலோ போயிருந்து தேசசேவை செய்யும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஒவ்வொ தொண்டரும் காந்திகுல்லாயை மஞ்சள் சாயத்தில் தோய்த்துப் போட்டுக்கொள்ள வேண்டும். படையில் சேருவதற்கு தகுந்தவர்கள் என்று காண்பித்துக் கொள்ள இதுவே தக்க சமயம் என்று ஸ்ரீமான் பி. வரதராஜுலு எழுதுகிறார்.

## கேரள கஷ்ட நிவர்த்தி நிதி.

மலையாளத்தில் உண்டான குழப்பத்தின் காரணமாகவும் அங்குள்ள ஒழுங்கீனங்களை யடக்குவதன் பொருட்டுப் பிரயோகிக்கப்பட்ட ராணுவச் சட்ட அமுல் காரணமாகவும் அந்த மாகாணத்தில் ஒரு பரிதாபகரமான நிலை ஏற்பட்டிருக்கின்றது. அதில் தமிழ் மாகாணத்தார் மிகவும் விரைவான கவனத்தைச் செலுத்த வேண்டியவர்களாக இருக்கின்றார்கள். அங்கே நூற்றுக்கணக்கான குடும்பத்தினர்கள் உண்ண உணவின்றி ஏற்கனவே பட்டினி கிடந்து தவித்துக் கொண்டிருக்கிறார். இன்னும் பல குடும்பத்தினர் அந்த நிலைமைக்கு விரைவில் வரக்கூடியவர்களாக இருக்கின்றார்கள். ராணுவச் சட்ட விசாரணையின் தண்டனைகளும் கொந்தரவுகளும் இன்னும் பல குடும்பங்களை முற்றிலும் உதவியற்ற நிலைமையில்வெகுவிரைவில்கொண்டு வந்து விட்டுவிடும் என்று அவசியமாய் எதிர்பார்க்கப் படுகிறது. அந்த சகோதர சகோதரிகளுக்குத் தற்சமயம் உதவியைச்செய்யவேண்டுவது தான் நமது கடமையாகுமேயன்றி அவர்களது குற்றங்களை விசாரணை செய்துகொண்டிருப்பது கடமையாகாது.

அங்கு தற்போது அவஸ்தைப்பட்டுக்கொண்டிருக்கும் திக்கற்ற குழந்தைகள் விதவைகள் காயமடைந்தவர்கள் உதவியற்றவர்கள் முதலியவர்களுக்கு ஜாதி மதபேதமில்லாமல் உதவிபுரிய வேண்டுமென்பதைப் பற்றி தஞ்சாவூரில் சமீபத்தில் கூடிய மகாநாட்டில் ஏற்படுத்தப் பெற்ற "கேரள கஷ்டநிவாரண நிதி" க்குத் தாராளமாக உதவிபுரியுமாறு நாங்கள் கேட்டுக்கொள்கிறோம். அப்படியுதவ விரும்புபவர்கள் செக்கு சள்மணியார்டர்கள் முதலியவற்றை "கேரள நிவர்த்திநிதி" என்றுகுறிப்பிட்டு தமிழ் மாகாணக்காங்கிரஸ் கமிட்டி பொக்கிஷதாரராகிய ஸ்ரீ என். என். காஜாமியான் ராவுத்தருக்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

டாக்டர். டி. எஸ். எஸ். ராஜன்

கே. ராஜகோபாலன்.

மாகாணக் காங்கிரஸ் கமிட்டி

காரியதரிசிகள்.

## "தேசபக்தன்" வழக்கு.

சென்ற மேமீ கூ-ம் தேதி தேசபக்தனில் வெளியான "அடக்குமுறை" என்னும் தலையங்க விஷயம் ராஜத்ரோகமானதென்று, பத்திரிகையின் சொந்தக்காரர்களான ஸ்ரீமான் ப. வெ. ராஜகோபால்சாரியார், எஸ். நாகேச்வர சாஸ்திரி இவர்களையும், பிரசுர கர்த்தாவான ஸ்ரீமான் மகாலிங்க ஐயரையும், பத்திராதிபரான ஸ்ரீமான் வ. வெ. ஸு ஐயரவர்களையும் இ. பி. கோ. கஉச-ஏ பிரிவின்படி கைது செய்து, சென்ற திங்கட்கிழமை (கஉ-கூ-உக) பிற்பகல் ங-மணிக்கு எழும்பூர் சீப் பிரஸிடென்ஸி மாஜிஸ்ட்ரேட் ஸ்ரீமான் பி. ஸி. லோபோ முன்பாக விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள். நால்வரும் எதிர்வக்ஷி ஆடுவதில்லையென்று சொல்லிவிட்டார்கள். போலீசார் தரப்பு சாக்ஷிகள் விசாரிக்கப்படுகின்றன. அதனுடன் கேஸை கஎ-ம் தேதிக்கு ஒத்திவைத்திருக்கிறார்கள். நான்கு எதிரிகளையும் சிறை மோட்டாரில் கொண்டு போனார்கள். கோர்ட்டில், கூடியிருந்த மகாஜனங்களால் வந்தேமாதர கோஷங்களே மிகுந்திருந்தன.

## புதுவயல்.

துன்மதிஞூ ஆவணிமீ உஎ உ இவ்வூர் கிழக்கூருணிக் கரையிலுள்ள ஸ்ரீ ரெங்கனாதப்பெருமாள் கோயில் தாயார், ஆண்டாள்சந்நிதிகள் புதிதாக ஏற்படுத்தப்பட்டு நாளது மீ உ ம் ஞாயிற்றுக்கிழமை காலை எ-மணிக்கு மகா கும்பாபிஷேகம் நகரத்தாரவர்களால் சிறப்பாய் நடத்தப்பட்டது. அன்றிரவு ஸ்ரீபெருமாள் ஆண்டாள் கருடவாகனரூடராய் திருவீதிகளில் பவனிவந்தகாக்ஷி மிகச்சிறப்பாயிருந்தது. இன்னும் மண்டிகோயிலுக்கு வேண்டிய பூஜை முதலிய ஸௌகர்யங்களை நகரத்தார்கள் ஏற்பாடுசெய்வார்கள் என்றுநம்புகிறேன்.

எ. பெரி. வீரப்பசெட்டியார்,

காரியதரிசி,

தனவைசியவாலிபர் சங்கம்.

## பள்ளத்தூர்.

துன்மதிஞூ ஆவணிமீ உஅ-உ இவ்வூரில் சீனி இடுவதில்லையென்று கட்டுப்பாடு வைத்ததை அங்கீகரித்து இதுவரை தைரியத்தோடு நடத்துவதற்கு முன் வருவாரில்லை. இம்மாதம் உசஉ ராம. மு. லெ. ராமசாமிச்செட்டியாரவர்கள் அவர்களுடைய பெண்குழந்தைக்கு தைரியத்தோடு முன்வந்து புதுமை செய்து கட்டுப்பாட்டை நிலைநிறுத்தினார்கள். அவர்களுடைய தைரியத்திற்கு மிகவும் நன்றிபாராட்டுகிறோம்.

அ. ராம. அள. ராமசாமிசெட்டியார்.

## நெற்குப்பை.

மாப்பிள்ளைதாலிகட்டியதுகுற்றமில்லை.

நெற்குப்பையில் மாப்பிள்ளைதாலி கட்டியது குற்றமென்று முத்து. க. லெ. வீட்டில் பாக்கு வாங்காமலிருந்தவர்களுள் இஷ்டமில்லாதசிலர்தவிர மற்றவர்கள் அது குற்றமான காரியமில்லையென்று தீர்மானித்துத் தழுவிக்கொண்டதாக ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.



ஏலென்செயும்! வினை தானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி புரட்டாசிமீ ௧௨.

## மகாத்மாவின் விஜயம்.

நமது பாரத பூமியானது, புண்ணியம் நிறைந்த பூமியாதலால், அடிக்கடி மகாத்மாக்களின் அவதாரங்களைப் பெற்றிருக்கின்றது. அதிலும் நமது தென்னாடு இவ்விஷயத்தில் மிகுந்த பாக்கியம் பெற்றுள்ளது. தென்னாட்டினர் இயற்கையிலேயே அன்பும் கருணையும் உருக்கமும் பக்தியும் உண்மையாகக் கொண்டுள்ளவர்களாதலால், அநேகமகாத்மாக்களின் தரிசனத்தைப் பல சமயங்களிற் பெற்றிருக்கின்றனர். மகாத்மாக்களென்பார் பிறப்பு முதல் ஜீவகாருண்ய முடையவர்களாகவும், ஸத்யமும் தர்மமும் சாந்தசித்தமும் சாஸ்த்ர சிரத்தையுமுடையவர்களாகவும், தமக்கென வாழும்விருப்பங்கொள்ளாமல்பிறர்க்கெனவே வாழும் பேரியல்புடையவர்களாவும்,உலகம்ஸத்யத்தில்நிலைத்து தர்மத்தில் தவழ்ந்து தெய்வபக்தியில் தேர்ந்து வளரும்படி செய்பவர்களாகவும், பாலர் விருத்தர்-பண்டிதர்பாமரர்-தோட்டிதொண்டைமான்-பறையன் பிராம்மணன்-ஆண்கள் பெண்கள் முதலிய யாவரையும் கடவுள் பார்ப்பதுபோல ஸமபார்வையால் பார்ப்பவர்களாகவும், அவர்களெல்லோராலும் போற்றப்பட்டவர்களாகவும் இருப்பார்கள்; அப்படியே இருந்திருக்கிறார்கள்.

இத்தகைய மகாத்மாக்களை நமது முன்னோர் தரிசித்திருக்கிறார்கள்; சரித்திரங்களில் எழுதியுமிருக்கிறார்கள். அந்த பாக்யம், இந்த புண்ய பூமியில் பிறந்தவர்களாகிய, நாமும் பெறாமல் போகவில்லை. தற்போது, நமது இந்திய தேசத்தாரால் மாத்திரமல்லாமல் மற்று எந்த தேசத்தாராலும், அவரவர் மதகுருக்களைப் போல ஆதரித்துப் போற்றப்படுவோராகவும், ஸர்வேச்ரனைப்போல சகல ஜீவர்களிடத்தும் ஸம பார்வையுடையவராகியும், சாந்தமே திருமேனியாக உடையவராகியும், பெயரைக் கேட்டோர் யாவருடைய இருதய குகையிலும் தங்கிக் குளிரச் செய்பவராகியும் ஒரு மகாத்மா அவதரித்து, நமக்கும் பிறர்க்கும் நன்மையே செய்து கொண்டிருக்கிறார். அவர்தாம் மகாத்மா காந்தியடிகள். அவர் நம்மைப் போல் உண்டுழலும் இயல்புடையரல்லர். உலகைக் காப்பதன் பொருட்டு உயிர்வாழ்வதால், ஆட்டுப்பாலும் பழங்களுமே யாகாரமாகக் கொண்டிருக்கிறார். அவர் பேசுவதெல்லாம் சத்யமே. அவர் செய்வதெல்லாம் தர்மமே. அவர் நினைப்பதெல்லாம் ஜீவர்களின் வாழ்வே. அவரைத் தரிசித்தவர்க்கு எவ்வித நோயும் நீங்கும். இனித்த குரலும் திண்ணியநினைவும் திடமான சொற்களும் உபதேச வாக்கியங்களும் உறுதியான உழைப்பும் உண்மையானநோக்கமும்உலகோர்நல் வாழ்வில்ஆத்திரமும் உடையவர்கள். இப்போது காலமழைகள் பெய்வதெல்லாம் அவர் பொருட்டேயாகும். அவரைக் கிறிஸ்தவர் தங்கள் ஏசுவின் அவதார ரென்றும், மகம்மதியர் தங்கள் நபியின் அவதாரரென்றும், ஹிந்துக்கள் யாவரும் கடவுள் அவதார ரென்றும் போற்றுகிறார்கள். அமெரிக்கா கண்டத்தாரும் அவரைப் போற்றிப்போற்றி எழுதுகிறார்கள். ஐரோப்பா கண்டத்தாரும் வாழ்த்தி எழுதுகிறார்கள். பல வெள்ளைக்காரர் அவரைத் தெரிசிப்பதற்கென்றே இந்தியாவுக்கு வந்துபோயிருக்கிறார்கள். ஜப்பானும் மமதையை விட்டு வாழ்த்திபேத்துகிறது.

இத்தகைய அவதார புருஷர்-உண்மையான யோகி-ஸ்வாநுபூதி ஞானி-சிறந்த பக்தர்-பிரத்யக்ஷ மகாத்மாவான ஸ்ரீ காந்தியடிகள், நாம் செய்துள்ள புண்யங்களின் பயனாக நமது தென்னாட்டை-நமது நகரவட்டகையை-பாரதமக்களாகிய நம்மை நாடி வருகிறார். தெய்வீகமாக வாய்த்துள்ள இந்தஸமயத்தை யாவரும் இழக்கமாட்டார்கள். இழக்க நேரின் புண்யம் போதாதென்றே தான் எண்ணவேண்டும். பணம் வாய்க்கப்பெறுவதும் குணம் வாய்க்கப் பெறுவதும் இன்னும் மற்ற எவைகள் வாய்க்கப் பெறுவதும், கர்வத்தை யொழித்தெறிந்துவிட்டு இத்தகைய மகாத்மாக்களைத் தரிசிப்பதற்கேயாம். இந்த ஸமயத்தை யாரும் இழந்துவிடாதீர்கள்.

நமது மகாத்மா அவர்கள், நாளிது புரட்டாசிமீ ௫-தேதி செவ்வாய்க்கிழமை பகல் ௩-மணிக்குத் திருச்சியை விட்டுப்புறப்பட்டு மாலை௬-மணிக்குக் காரைக்குடிக்கு விஜயம் செய்கிறார். அவர்களை நாமெல்லோரும் அழைத்துவரப்போகவேண்டும். பூர்ண கும்பங்கள் எடுத்துச் செல்லவேண்டும். வேதகோஷம் மிகவேண்டும். பிரபந்தவொலி பெருகவேண்டும்.தேவாரப்பண் இசைழவேண்டும். நமாஸ் ஓதப்பெற வேண்டும். நமது சுதேச உடைகளைப்பார்ப்பதில் அவர்கட்கு அதிக ஆவலுண்டு.

ஆகையால் நாமெல்லோரும் யாதொருவிதமான வித்யாஸமும்பாராட்டாமல் அப்பெரிய மகாத்மாவை எதிர்கொண்டழைத்துப்போற்றுவோமாக. அவர்கட்குக் கோயிலுர்த் தெரிசனத்திலும் ஸங்கல்பம் இருப்பதாகத் தெரிய வருகிறது. மகாத்மாவைத் தெரிசிப்பதும் உபசரிப்பதும் போற்றுவதும் நமது வாழ்வை-ஆத்மாவைத்திருத்திக் கொள்வதேயாகும்.

---

## ஸ்ரீமான் சுப்ரமண்யபாரதி.

"நெருநல் உளனொருவன் இன்றில்லென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு."

செந்தமிழ் நாடெல்லாம்ஒருமிக்கப் போற்றும் உருக்கமும் வீரமும் பொதிந்தன தேசகீதங்களைப்பாடிப்பலர்க்கும்-யாவர்க்கும் வீரமுண்டு-சுதந்தரமுண்டு என்னும் இயற்கையை யெழுப்பிக் காட்டிய ஞானியாகிய சுப்பிரமணிய பாரதியார் இம்மண்ணுலகைவிட்டு விண்ணுலகுக்குச் சென்றுவிட்டார். சென்ற திங்கட்கிழமை இரவு ஒரு மணிக்கு அவர் ஆவி பிரிந்துவிட்டது. அவருக்குத் தற்போது ௩௯-வயதுதான் ஆகிறது. இதற்குள் தமிழ்நாடெங்கும் கீர்த்தி வாய்ந்து இத்தென்னாட்டில் கவித்திறமையிலும் தேசபக்தியிலும் சுதந்தரவெழுச்சியிலும் அஞ்சா நெஞ்சிலும் ஒப்பற்றவராக விளங்கினார். அவர் நினைவெல்லாம் வீர நினைவே. அவர் சொல்லெல்லாம் வீரச்சொற்களே. அவர்செய்கையெல்லாம்வீரச் செய்கைகளே. அவர் உட்காரும்போதும் படுக்கும்போதும் சிற்றுண்டி கொள்ளும்போதும் உணவு எடுத்துக்கொள்ளும்போதும் நடக்கும்போதும் வீரத்தோற்றங்களையே நாம் கண்டிருக்கிறோம். அன்பும் அறிவும் வீரமும் கல்வியும் நிறைந்த உருவமடைந்த தாங்மறு ஞானி நம்மைவிட்டுப்பிரிந்து போய்விட்டார். சிறு பிராயத்தில் கல்விச் சாலையை விட்டு வெளிவந்தவுடன், இந்தியா வென்னும் பத்திரிகையை நடத்தி வந்தபோதும், அப்பத்திரிகை யெல்லாம் வீரமேஜ்வலித்துக்கொண்டிருந்தது. அப்பத்திரிகை காரணமாக அவர், பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து புதுச்சேரியில் வாசம் செய்யும்படியான காலம் நேர்ந்தபோதும், அவரது வீரம் அதிகப்பட்டதேயன்றிக் குறையவேயில்லை. புதுச்சேரி வாசமாகிப் பத்து வருஷங்களையும் கழித்து நம்நாட்டுக்கு வந்த பிறகும், வீரப்பாட்டுக்களை பாடி வந்திருந்தார். சிலகாலம் சுதேசமித்திரனில் உதவியாசிரியப் பதவியையும் வகித்துக் கலகதியடைந்துவிட்டார். இவரதுதேகம் மறைந்து போயிற்றேயன்றி, இவரது கீர்த்தியும் இவரது பாடல்களும், இவரது உருவை நம்மவர்மனதில் பதித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால், வீரமாகப் பாடக்கூடியஞானியொருவரைத் தமிழ்நாட்டினராகிய நாம் இழந்துவிட நேர்ந்ததே என்னும் துக்கம் எம்மைவிட்டுப் போகமாட்டேனென்கிறது. அவரது குடும்பத்தவர்கட்கு ஆறுதல் சொல்ல நம்மையன்றி வேறு யாருளார். தமிழ் மணம் விசிரிந்த நாமதாம் ஆறுதல் சொல்ல வேண்டும். அவரால் இயற்றப்பெற்றுள்ள பாட்டுப்புத்தகங்களையும் இதரபுத்தகங்களையும், அச்சிடுவிதலும் விலைக்கு வாங்கியும் நாமும் பயனடைவதன்றி, அவர்குடும்பத்தாரும் பயனடைந்து ஆறுதல்பெறும்படியாகச் செய்யவேண்டியது, ஒவ்வொருதமிழனுக்கும் இன்றியமையாத கடமையாகும்.



ஓம்
வந்தேமாதரம்.

# வருகிறார்கள்.

மகாத்மாவும் மௌலானா மகமதலியும்

(20-9-21) துன்மதிவருஷ புரட்டாசிமீ ௫உ
செவ்வாய்க்கிழமை மாலை
காரைக்குடிக்கு வருகிறார்கள்.

## உள்ளூர்வர்த்தமானம்.

பொதுக்கூட்டம்:— ஆவணிமீ ௩௧உ (௧௬-௯-௨௧)வியாழக்கிழமைமாலை ௬ மணிக்குக்கல்லுக்கட்டிமேல்கரையில் காங்கிரஸ் காரியதரிசியால், மகாத்மா அவர்களின் செட்டிநாட்டு விஜய விஷயமாகவும் அவர்களை வரவேற்றல் விஷயமாகவும் ஒரு பொதுக்கூட்டம் கூட்டப்பெற்றது. ஸ்ரீ மோ. வெ. கோவிந்தராஜையங்காரவர்கள் அக்ராசனம் வகித்தார்கள். ஸ்ரீமான் ராமபத்ர சர்மா அவர்களும், புதுக்கோட்டை ஸ்ரீமான் குப்புசாமி ஐயாவர்களும், ஸ்ரீமான் சுப்பிரமணிய சிவா அவர்களும் தென்னாட்டுக் கவிசிரேஷ்டர் ஸ்ரீமான் சி. சுப்ரமண்ய பாரதியாரவர்களின் மரண விஷயமாகவும், "தேசபக்தன்" ஆசிரியராக இருந்த ஸ்ரீமான் வ. வெ. ஸு. ஐயரவர்கள் முதலியோர் சிறைப்பட்ட விஷயமாகவும், தேசபக்தர் ஸ்ரீமான் ஹநுமந்தராவ் அவர்கள் தண்டனையடைந்த விஷயமாகவும் உண்டான துக்க சமாசாரத்தையும் வீரசமாசாரத்தையும் அரசாங்கத்தின் செயலையும் கூறி, பின்னர் மகாத்மாவின் விஜய விஷயமான சந்தோஷ சமாசாரத்தையும் பேசினார்கள். ஸ்ரீ சுப்ரமண்ய சிவம் அவர்கள் உள்ளூர் காங்கிரஸ் கமிட்டியின் ஊழல்களை யெடுத்துப்பேசி அந்த ஸபையைத் திருத்தியமைக்க வேண்டுமென்று வற்புறுத்திப் பேசினார்கள். காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீமான் பசலா கிருஷ்ணையாவர்கள் கமிட்டி விஷயமாகவும் மகாத்மாவின் வரவேற்பு விஷயமாகவும் பேசினார்கள். அக்ராசனரவர்கள் முகவுரையிலும் முடிவுரையிலும் ஒரு தேசபக்தரது மரணத்தையும், இரு தேசபக்தரது சிறைவாசத்தையும் பற்றிப்பேசி, மகாத்மாவின் பெருமையையும் விவரித்து, அவர்களது வரவேற்பில், பணக்காரர் முதல் ஏழைகள் வரை யாவரும் ஜாதிமதபேதமில்லாமல் கலந்துகொண் டிருக்க வேண்டுமென்று கூறினார்கள். "வந்தே மாதரம்" "மகாத்மா காந்திக்கி ஜேய்" முதலிய தேச வாழ்த்தொலிகள் பரவ இரவு ௮ மணிக்கு சபை இனிது நிறைவெய்தியது.

காந்தி தொண்டர் படை:— இக்கூட்டத்தார் கல்லுக்கட்டி மேல்கரைச் சந்தில் ஜாகை வைத்திருக்கிறார்கள். மகாத்மாவின் வரவேற்பையநுசரித்து இத்தொண்டர் படையிற் சேர விரும்புவோர் ௨௦-வயதுக்குட்பட்டவர்கள் அந்த ஜாகையில் வந்து பதிவு செய்து கொள்ளலாமென்று கேட்டுக்கொண்டார்கள்.

பாரதாச்ரமம்:— ஸ்ரீ சுப்பிரமணிய சிவா அவர்களாற் பாதுகாக்கப் பெற்று வரும் இந்த ஆச்ரமத்தில் இன்று மாலை ௩-மணிக்கு மகாத்மாவின்வரவேற்பு விஷயமான ஆலோசனை கூடுகிறதாக விளம்பரம் வந்திருக்கிறது. பல பிரமுகர்கள் எதிர்பார்க்கப் பெறுகிறார்கள். மகாத்மா அவர்களின் விஜயத்திலும் வரவேற்பிலும் சிரத்தையுடையவர்கள் இன்றல்ல நாளையாயினும் நாளை மன்றாயினும் பாரதாச்ரமத்துக்குச் சென்று தங்களது உதவியைத் தாராளமாய்ச் செய்யலாம். பாரதாச்ரமத்தார், பாரதமாதா கோவிலுக்காக அமராவதியில்வாங்கியிருக்கும் இடத்தில், மகாத்மா அவர்களைக் கொண்டு அஸ்திவாரம் காட்டுவதாகவும் யோசித்து ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார்கள்.

## தந்திச் செய்தி.

சைகோன் ஆவணி ௩௧உ
மதராஸ் உண்டியல் விலை நூற்றுத் தொண்ணூற்று மூன்று.
சிங்கப்பூர்வட்டம் பதினாறு.

இரங்கூன் ஆவணிமீ ௩௧உ
பினாங்கு உண்டியல்விலை நூற்று அறுபத்தைந்து.
நெல்விலை இருநூற்று அறுபது.
அரிசிவிலை அறுநூறு.
உளுந்து விலை எழுநூறு.
மிககடுமை.

## தனவைசிய ஊழியர் சங்கம்.

பள்ளத்தூர் ஸ்ரீமாங் சு. சொ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் ஆவணி மீ உ௦உ நடைபெற்ற தமது ஷஷ்டியப்தபூர்த்தியில் நமது சங்கத்திற்கு ரூபாய் ஏ-சம் பாவனை செய்து அனுப்பியிருப்பதற்கு நன்றி பாராட்டுகிறோம்.

கண்டரமாணிக்கம் ஸ்ரீமாங் வி. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் குமாரன் சிரஞ்சீவி காசிவிஸ்வநாதனுக்கு ஆவணி மீ உ௦ நடைபெற்ற கலியாணத்தில் நமது சங்கத்திற்கு ரூபாய் இருபத்தைந்து சம் பாவனை செய்தனுப்பியிருப்பதற்கு நன்றி பாராட்டுகிறோம்.

காரியதரிசி,
தனவைசிய ஊழியர் சங்கம்.

## பாகனேரி.

ஆவணி மீ கூ௦

இவ்வூர் வாலிபர் சங்கத்தின் ஆதரவில் சுவாமிமடத்தில் நேற்றுப் பிற்பகல் இ-மணிக்கு ஒரு கூட்டம் கூட்டப்பெற்றது. ஸ்ரீமாங் ராய சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். ஸ்ரீமாங் பெ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் "நமது நிலை" என்பதையும் ஸ்ரீமாங் சொ. முருகப்பசெட்டியாரவர்கள் "தற்காலநிலையும் நமதுகடமையும்" என்பதையும் உபந்நியசித்தார்கள். இரவுகூ-மணிக்குசபை இனிது நிறைவெய்தியது என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## உப்பூர்.

இவ்வூர் ஸ்ரீ வெயிலுகந்த விநாயகரின் உற்சவம் நன்மதிஞ் ஆவணி மீ கஉ-ந் தேதி தவஜாரோகணமாகி உகஈ தேதி வரை வெகு சிறப்பாய் நடைபெற்ற... வீதிகளெல்லாம் நன்கு அலங்கரிக்கப்பெற்றிருந்தன. நான்கு வருணத்தோருக்கும் போஜன வசதிகள் செய்யப்பட்டன. தேவகோட்டை ஜமீன்தாரவர்களும் அவர்களது சகோதரர்களும் உற்சவத்தை சிறந்தையோடு நடத்தி வருவது பற்றி உற்சவத்தின் காட்சியைக் காணுவதற்காகத் தேவகோட்டை பிரமுகர்களும் ஏராளமான ஜனங்களும் விஜயம் செய்திருந்தார்கள். உகஈ தேதி விநாயக சதுர்த்தி யன்று காலம் ஜமீன்தாரின் சகோதரர் ஸ்ரீமாங் ... யணன் செட்டியாரவர்களால் செய்து வைக்கப்பெற்றிருக்கும் வெள்ளிரதத்தில் வெயிலுகந்த எம்பெருமான் யாவருக்கும் காட்சிகொடுத்து ஊர்வலம் வந்த சிறப்பானது மனோரம்மியமாக இருந்தது. கனம் ஜமீன்தாரவர்களும் அவர்கள் சகோதரர்களும் முன்னுயே வந்திருந்து ஒவ்வொன்றையும் கவனித்த சிறப்பாக உற்சவத்தை நடத்தி வைத்தது பாராட்டத்தக்கது. கனம் ஜமீன்தாரவர்களும் அவர்களது சகோதரர்களும் நீண்ட ஆயுளுடனும் சுகாதாரத்துடனும் புத்திர பௌத்திர ஸம்பத்துகளுடனும் வாழ்ந்து இன்னும் பல தர்மங்களை செய்து வரும்படி எல்லாம் வல்ல வெயிலுகந்த விநாயகர் திருவருள் பாலிப்பாராக.

டி. எல். நாகசுந்தரம்.

## வியாபாரப் பகுதி.

### பினங்குக்கடிதம்.

ஆவணி மீ உகஉ

உண்டியல்விலை.

| | | |
|---|---|---|
| சென்னை ஆவணி மீ கஎஉ | | கஈ-ச |
| " | கஅஉ | கஈ-ரு |
| " | உகஉ | கஈ-ரு |
| " | உ௨உ | கஈ-ச |
| " | உருஉ | கஈ-ரு |
| ஹொங்கோங் | ... | உ௦-௦/௦ |
| அமெரிக்கா | ... | சஉவ |
| இந்தியா சிலோன் மணியார்டர் விலை | | கஈ௦ |

கடைத்தெரு.

| | |
|---|---|
| பார்வெள்ளி ஒரு அவுன்ஸ் | ருகூ-உ-௦ |
| கறப்பு மிளகு பீக்கல் | கசு |
| வெள்ளை மிளகு " | ருக |
| சர்க்கரை நயம் " | கஈ-ரு௦ |
| கொப்பரா " | கஉ-எரு |
| சீயம் அரிசி முதல் தரம் மூட்டை | கஎ-ரு௦ |
| ஷை உ-ம் தரம் | கஎ |
| மோல்மேன் அரிசி முதல் தரம் மூட்டை | சஉ-அ௦ |
| உள்ளூர் அரிசி மூட்டை | கரு-அ௦ |
| தேங்காய் க௦௦௦ | சரு |

ஈயம்

| | | |
|---|---|---|
| ஆவணி மீ கஎஉ | | எஅ-ஈ-அ |
| " | கஅஉ | எஎ-ரு |
| " | கஈஉ | எஅ-ரு |
| " | உகஉ | எஅ-ரு |
| " | உ௨உ | அ௦-௦ச |
| " | உருஉ | அக-௦ரு |

ரப்பர்.

| | |
|---|---|
| புகைபோட்டது பவுண்டு | ௦-உருஉ |
| யூ ஷீட் | ௦-கச |

பங்கு (Share) நிலவரம்.

பினங்கு மெஸர்ஸ் கென்னடி கம்பனி விளம்பரம்:—

வாங்குபவர்விலை

| | |
|---|---|
| நார்த் தைப்பிங் | க-ருஉ |
| பாப்பான் டின் | ௦-ரு௦ |
| சௌத் தைபிங் | ௦-சுஎஉ |
| தைப்பிங் டின்ட்ரெட்ஜிங் | க-௦௦ |
| துரோனம் மைன்ஸ் | க௦-௦௦ |
| தொங்கா கம்பவுண்ட் N. L. | எ/- |
| ஷை Hr டின் ட்ரெட்ஜிங் | கச-ரு௦ |
| சென்டரியாங் டின்ட்ரெட்ஜிங் | கஉ/- |

ரப்பர்.

| | |
|---|---|
| காட்டோயாங் B. | எ௦-காசு |
| தாப்பா | க௦-ரு௦ |
| ஆயர் கூனிங் | க-ரு௦ |
| கிட்டா ரப்பர் கம்பெனி | உ-ரு௦ |

பொது.

| | |
|---|---|
| ஈஸ்டேன் ஷிப்பிங்கம்பனி | கூ—உரு |
| ஈஸ்டேண்ஸ்மெல்டிங்கம்பனி | கூ—உரு |
| ஸ்ரெயிட்ஸ் ட்ரேடிங் | கரு—எரு |

### சென்னை.

ஆவணி ௩௦உ

| | |
|---|---|
| பவுன் விலை | ககூ—எ—௦ |

சீமை உண்டியல்விலை தந்திமூலம் ஒரு ரூபாய்க்குப் பதினேமுக் காலேவீசம் பென்ஸ்.

ஆவணி மீ நடப்புவட்டி அரையும் கால்வீசம்.

இம்பீரியல் பாங்க் வட்டி ஐந்து.

ஷை பாங்க் ஷேர் வாங்குபவர் விலை கஉகூ௦

ஷை பாங்க் ஷேர் (கஉரு செலுத்தப்பட்டது) விற்பவர் விலை ரு௦

தாதா இன்டஸ்ட்ரியல் பாங்க் (உஉஉ செலுத்தப்பட்டது) விலை உசஉ

### உள்ளூர்.

| | |
|---|---|
| மதராஸ்உண்டியல்வட்டம் | ௦—அ—௦ |
| ரங்கூன் வட்டம் | க—அ—௦ |
| பவுன் விலை | ககூ—சு—௦ |
| வெள்ளி விலை | க௦க—௦—௦ |

### கொழும்பு.

ஆவணி மீ உகஉ

நிசூ ராத்தல் கொண்ட கொப்பரா பாரம் க-க்கு விலை ரூ. கூச

தேயிலை ராத்தல் க-க்கு ௦-உரு சதம் முதல் ரூ. க வரை

ரப்பர் ராத்தல் க-க்கு ௦ அ சதம் முதல் ௦-சரு சதம் வரை

சாவாசினி அந்தா மூட்டை ++-க்கு ரூ. சக ரு௦

முத்துச்சம்பா அரிசி புசல் க-க்கு ரூ. எ-எரு

ரெங்கூன் அரிசி உஉ புசல் மூட்டை க-க்கு விலை ரூ. கஎ-ரு முதல் ரூ. சஅ-ரு௦-வரை

ஷை பச்சரிசி கூ புசல் மூட்டை க-க்கு ரூ. உக-

தங்கபவுன் க-க்கு ரூ. ககூ-அ௦

பாங்க் வட்டி அ

நடப்புவட்டி அரைபே வீசம்.

### பிழை திருத்தம்.

சென்றவாரம் வியாபாரப் பகுதியில் சென்னை ஆவணி மீ நடப்புவட்டி "அரை" என்றிருப்பதை "அரையங்கால் வீசம்" என்று திருத்திக்கொள்ள வேண்டும்.

இந்த வாரம் இரண்டாம் பக்கத்தில் "எம். சின்னையா செட்டி" என்று கை யொப்பம் தவறாக அச்சிடப்பட்டிருப்பதற்கு வருந்துவதோடு "எம். சின்னையா செட்டியார்" என்று திருத்திப் படிக்குமாறு வேண்டுகிறோம். பத்திராதிபர்.



## இளைஞர் பகுதி.

தனவைசிய வாலிப சகோதரர்களே!

மானிட ஜன்மமெடுத்த ஒவ்வொருவனுக்கும் அபிமானம் அவசியமிருக்கவேண்டும். அபிமானமில்லாதவனைப் பேமானி என்பார்கள். தான் பிறந்த குடும்பம் குலம் கோத்திரம் தேசம் மதம் முதலியவைகள் மேல் முன்னேற வேண்டுமென்னும் அபிமானம் அவசியமிருக்கவேண்டும். இளம் பிராயத்தில் மனம் சஞ்சலமற்று நிர்மலமாயிருந்தபோது எந்தெந்தவிதத்தில் எத்தப்படி பழகினேமோ, அந்தந்த விஷயங்களிலெல்லாம் அபிமானம் பசுமரத்தாணி போல் வேரூன்றி; நமக்கேனும் நமக்கு உரிமையாக உள்ளவர்களுக்கேனும் சம்பந்தப்பட்ட பொருளினிடத்து ஒருவித பிரீதியுண்டாயது மானிடரியல்பு. மிருகங்களுக்கும் பறவைகளுக்குங்கூட ஓர் காலத்தில் பழகிய இடத்தைப்பற்றிய அபிமானம் சில சமயங்களிலே கரைபுரண்டு மேலெழுகின்றது. இதுவே தேசாபிமானத்திற்கு மூலகாரணமெனச் சொல்லலாம். இவ்வித தேசாபிமானம் நமக்கு இயற்கையில் அமைந்திருப்பது ஈஸ்வர கடாக்ஷமென்றே சொல்லவேண்டும். ஏனெனில், ஒவ்வொருவனுந்தன்னுடைய ஸ்வப்பிரயோஜனம் ஒன்றையே கருதி "என் வீடு, என் குடும்பம், என் அலுவல், என் சொத்து, என் சுற்றத்தார்" ஆகியன மாத்திரம் மேன்மையடைந்தால் போதுமானதென்றும், எனக்கு வருமானமில்லாத விஷயத்தில் நான் பிரவேசிக்கக் கூடாதென்று எண்ணும் தப்பான அபிப்பிராயங்களுக்கிடங் கொடாமல் தன்னுடைய தேசத்தின் க்ஷேமத்திற்கேற்றகாரியங்களைச் செய்வதற்குத் தனது உடல் பொருள் ஆவி மூன்றையும் தன்னுயிர் வரையில் தத்தஞ் செய்வதற்குத் துணிவதுவே தேசாபிமானமாகும். ஆகவே, நீங்க ளொவ்வொருவரும் சுயநலத்தைக் கருதாது, நமது தேசம் முன்னேறுவதின் பொருட்டு முன்வந்து உழைப்பதவசியமன்றோ? மகாத்மா காந்தியடிகள் நம் தேசத்துக்கு உழைத்து வருவதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். நீங்களொவ்வொருவரும் மகாத்மா காந்தியடிகள் சரித்திரத்தை அவசியம் வாங்கிப்படிக்கவேண்டும்.

நண்பர்களே! நீங்கள் தற்சமயம் முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய வைகளை மற்றும் இங்கு குறிப்பிடுகிறேன். அதாவது நமது சமூகத்தில் சிறிது காலத்திற்கிடையில் ஒவ்வொரு காரியமும் வேறுபட்டு ஒழுங்கின்றி நடைபெற்று வருகின்றன. இதனை ஒழிக்கவே தனவைசியசங்கத்தார் வேலைசெய்து வருவது நான் சொல்லாமலே உங்களுக்குத் தெரிந்த விஷயந்தான். இது ஒரு சிறந்த தருமமாகும். ஆகவே, நீங்கள் ஒவ்வொருவரும் ஊழியனை ஆதரிக்க வேண்டுவதவசியமல்லவா? நீங்கள் ஊழியனைப் படித்து அதன் வேண்டுகோளின்படி வெற்றிபெற முயற்சிசெய்க்க வேண்டும். உங்களுடைய வாலிபம் வீணாக்குவதிலென்ன பயன்? உங்களாலியன்ற உதவியை சமூகத்திற்குப் புரிவதவசியமென்று நான் சொல்லாமலே நீங்கள் ஆமோதிப்பீர்களென்று நான் நினைக்கிறேன். ஆகவே, நீங்கள் ஒவ்வொருவரும் உங்களாலியன்ற உதவியான பொருளைத் தருமத்தின் பொருட்டுச் சேர்த்து வைக்க வேண்டும். உங்களுக்கு தேசசரித்திரம் தெரியவேண்டுவ தவசியம். ஆகவே, தேசசரித்திரப் புஸ்தகம் வாங்கிப் படித்துவரவேண்டும். மற்றும் வர்த்தமானப் பத்திரிகைகள் தினந்தோறும் வாசிக்கவேண்டும். பத்திரிகை வாசிப்பதனால் பெரிய அறிவாளியாகக் கூடும். நீங்கள் ஒவ்வொருவரும் ஊழியனை வாங்கிப்படித்து வருவதோடு இதர வர்த்தமானப் பத்திரிகைகளையும் வாங்கிப் படித்து வருவீர்களென்று நம்புகிறேன். நம் "ஊழியன்" வாயிலாகவே சகலகாரியங்களும் தெரிந்துகொள்ள சக்தியுண்டு.

மு. ராமநாதன், கோலக்கங்சார்.

## வீரம்.

நாம் ஒவ்வொருவரும் வீரத்தோடிருத்தல் வேண்டும். பயந்த தன்மை அச்சமயம் கூடாது. எதற்கும் பயப்படக்கூடாது? பாத்தையர் வீட்டிற்கு பறந்து பறந்து செல்லுவதற்கா? அன்று; பந்தய வண்டிகளில் ஏறிக்கொண்டு பள்ளமேடு பாராமல் பந்தயம் விடுவதற்கா? அன்று; சதாகாலமும் சீட்டுப்போட்டு மூன்னோர் சம்பாதித்த பொருளை அழிப்பதற்கா? அன்று; சோம்பேறித்தனமாய்ச் சோர்ந்து வீழ்வதற்கா? அன்று; சபையின் முன்னின்று அசட்டுத்தனமாய்க்குழறுவதற்கா? அன்று அன்று. பின்னை எதிற்றீரங்காட்ட வேண்டும். உலகத்திற்கு உபகாரம் செய்வதில்-தேசத்திற்குப் பாடுபடுதலில்-பண்டைப் பெருமையைப் பரப்பி நிலைநாட்டுதலில்-ஜாதி நன்மைக்கு உழைத்தலில்-உண்மைப் பெரியாரைப்பின் பற்றுதலில்-செய்யும் தீர்மானங்களைச் செய்கையிற் காட்டுதலில்-சுதேசியத்தைப்பரப்புவதில்-பாடங்கள் படித்தலில்-உண்மையானவற்றை உணர்ந்து முயற்சி செய்தலில்-வீரம் பயமின்மை காட்ட வேண்டும். வீரத்தோடிருத்தல் வேண்டும். பாரமென்று பயப்படக்கூடாது. அவதிமயன்றெண்ணி அஞ்சுதல் அழகன்று.

அர்ச்சுனன் வீமன் அரிச்சந்திரன்நளன் வள்ளுவன் கம்பன் காளிதாஸன் நக்கீரன் முதலிய நல்லோர்-வீரர்-பிறந்த நாட்டில் உதித்தும் பழங்கதைகளையே பாராட்ட வாய்ப்பேச்சு பேசிக்கொண்டிருத்தலில் பயனென்ன? குறை கூறிக்கொண்டிருப்பதில் குணம் என்னே? காலத்தினும் பெரிதாங்காலத்தை அவமே கழித்தலில் லாபம் என்னே? எவ்வெவற்றையும் முயற்சித்தும் பெற்றுவிடலாம். சென்ற காலத்தைத் திரும்பப்பெறுதல் முடியாது. கடவுள் நமக்குக் காலத்தை அளந்து கொடுத்திருக்கின்றார். அவமே கழித்தல் நன்றன்று. அஞ்சாமை வேண்டும். அறத்தைச் செய்ய முன் வரல்வேண்டும். பாத்தையரில்லம் பார்த்தலும் கூடாது. மனிதத் தன்மையோ டிருத்தல் வேண்டும். அருமையாய்க் கிடைத்த மானிட ஜன்மத்தைப் பாழ்படுத்தல் கூடாது. உண்மை-விடாமுயற்சி-வீரம்-தைரியம் வேண்டும். எக்காரியத்தையும் சாதித்து விடலாம். தீமையகற்றி நற்கருமத்தைச் செய்ய நாடவேண்டும். வாலிபப்பருவம்போனால் திரும்பி வாராது. இளமை சென்றால் மறுபடி பெறமுடியாது. ஆங்கிலம் நன்ருய்ப் படித்தல் வேண்டும். உண்மையே உரைத்தல் வேண்டும். ஊக்கத்துடன் எடுத்த காரியத்தை முடிக்க முயற்சிக்க வேண்டும். சைவசமயத்தைப் பாழ்படுத்திய சமணரை வாதில் வென்ற சம்பந்தரின் வயது எத்தனை? நெற்றிக் கண் காட்டித் திறப்பினும் குற்றம் குற்றமேயென மொழிந்த குணக்கடல் நக்கீரனின் தீரமென்ன? அழைத்தது அரசனுயினும் யாவனாயினும் "நாம் ஆர்க்கும் குடியல்லோம்" எனக்கூறிய "அருமை மூர்த்தியாம் அப்பர் சுவாமிகளின் அரும் பெரும் வீரமென்ன? இன்னவை தெரிந்தும் பயத்தினால் பதுங்கியிருத்தல் பண்பாகுமோ? நன்ருய் நம்மறிவைப் படித்துப் பண்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். ஊக்கத்துடன் அரிய நூல்களை உணர்தல் வேண்டும். உணர்ந்த பின் உலகத்திற்கு நல்ல வீரத்தோடு-தைரியத்தோடு உபகாரம் செய்ய முன்வர வேண்டும். வாலிபர்களே! இனியும் வாளாவிருத்தல்கூடாது. தாழ்மை-தன்மலமறப்பு-வீரம்-அசையா நடுவுநிலைமை-உண்மை முதலியவைகளை மனத்தே கொண்டு உழைக்க முன் வாருங்கள்! தைரியமாயிருங்கள்!! அஞ்சாமை யோடிருங்கள்!!! பயத்தை வெறுத்துத் தள்ளுங்கள். தைரியத்துடனும் ஊக்கத்துடனும் உழைத்தவரும் ஊழியர் சங்கத்தாரைப்போல உழைக்க முன் வாருங்கள். ஜாதிப் பெருமையை நிலைநாட்ட வாருங்கள். ஜாதியின் மானத்தை நழுவவிடாமல் காட்ட முன் வாருங்கள்.

தரளமுதல்வன், காரைக்குடி.

# மாதர் பகுதி.

ஸ்ரீமான் ம. கோபாலகிருஷ்ணையர் அவர்களது உபந்யாச சாரம்.

(முன் வாரத்தொடர்ச்சி.)

**ஞானத்திற் சிறந்தார்:**—மங்கையர்க்கரசியார். இவர்கள் சோழராஜன் புத்திரி; கூன்பாண்டியன் மாதேவி. சிவபக்தியிற் சிறந்துள்ளவர்கள். சைவசமயத்தில் ஆழ்ந்த அறிவுடையவர்கள். ஸமயஞானத்தில் மனோவைராக்கிய முடையவர்கள். தம் கணவனாகிய பாண்டியராஜன் முதல் மதுரையிலுள்ள யாவரும் சமண சமயப் படுகுழியில் வீழ்ந்து ஆழ்ந்திருக்கும்போது, சைவ சமயத்தில் உறுதியான வாழ்வுடைய மந்திரியாகிய குலச்சிறை நாயனருடன் ஆலோசித்துத் தமது நாட்டையும் மன்னனையும் அக்குழியிலிருந்து மீட்கவேண்டியதற்காக, யாத்திரை மார்க்கம் வேதாரண்யத்திற்கு விஜயம்செய்திருந்த, ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானை வரவழைத்து, அவர் அருளால் சமண சமயத்தையும் சமணர்களையும் ஓட்டிவிட்டு, மதுரையையும் மன்னவனையும் மீண்டும் சைவ சமயத்திற் புகுந்து வாழும்படி செய்த உத்தமியாகும். திருஞான சம்பந்தப் பிள்ளையாரும் இம் மங்கையர்க்கரசியாரது மனப்பான்மையையும் பக்தியையும் பெருமையையும் உணர்ந்து, அவை விளங்கும்படியாகத் தமது அரிய திருவாக்கினால் பாடியிருக்கிறார்கள்.

திலகவதியார் என்னும்பெண்மணியார் தமக்குப்பாலியத்தில், பெற்றோர்களால், கணவன் என்று பேசி ஏற்பாடு செய்யப்பெற்ற ஆண்மகன் இறந்துபடவே, அவரால் கரக்குப் பல்லோரறிய—அக்கினி சாக்ஷியாக மாங்கல்யதாரணஞ் செய்வித்துக் கல்யாணம் நடந்தேறு விடினும், பெற்றோரால்நிர்ணயிக்கப்பெற்றுத் தம் மனதால் அங்கீகரிக்கப்பெற்ற காரணங்களைக் கொண்டே, அவர் இறந்தது முதல் கைம்மை பூண்டு (கைம்மை—விதவைத் தன்மை) சிவபக்தியிற் சிறந்து சிவாலய கைங்கர்யகைங்கர்ய மெய்ப் பேறு பெற்றார்.

சமண சமயத்திற்புகுந்துதிரிந்த தமது சகோதரர்மருணீக்கியார்க்கும் சிவஞானம் தரும்படி சிவபிரானைத் தியானித்து, அப்பெருமான் அருளால் தமது திருத்தம்பியாரை மீட்டு விபூதி ருத்திராக்கப் பிரசாதம் கொடுத்தருளி திருநாவுக்கரசு என்னும் அரிய திருநாமமும் வாங்கிக்கொடுத்தார்கள்.

**வீரத்திற் சிறந்தார்:**—ஒக்கூர் மாசாத்தியார் முதலிய பலர் இருந்திருக்கிறார்கள். இவர்களுட் பலரும்வீரமும் கல்வியும் ஒழுக்கமு முடையவர்களாக இருந்தார்கள். ஒரு வீரமாது தனது தந்தை தமயன் புருஷன் முதலிய யாவரும் போருக்குச் சென்று வீரசொர்க்கம் எறினதைக் கேள்வியுற்றும், மனந்தளராமல் வீரவம்சத்திற் பிறந்த தனது கடமையைச் செலுத்துவதையே முக்கியமாகக்கவனித்து, சிறுவயதுடைய தனது ஒற்றைப்புத்திரனுக்கு போர்க்கோலம்செய்வித்து போர்க்கனுப்பினாள். பிறகு போரில் அவனும் பட்டிறந்தான்என்றுகேள்வியுற்று, "முதுகிலா? அல்லது மார்பிலா? காயம்பட்டிறந்தான்" என்று அறியும்பொருட்டுப் போர்களத்துக்குச்சென்று பிணங்களைப் புரட்டித் தனது குமாரனது சவமிருந்ததைத்தெரிந்தெடுத்து,வீரமொழிகள்கூறிவந்தனள். அவள் தனக் கெதிர்ப்பட்டாரிடம்வீரவார்த்தைசொல்லும்போது, போர்க்களத்தில், "எய்போற்கிடந்தான் என் ஏறு" என்று கூறியிருக்கிறாள். எய் என்றால் முள்ளம்பன்றி; சிங்கம்போன்ற என் மகன் யுத்தம்செய்து எதிரிகளது அம்புகள் மார்பிலேறப்பெற்று மார்பெல்லாம் அம்புகள் நிறைந்திருக்க, முள்ளம் பன்றிபோற்கிடந்தான் என்று கூறினாள்.

**புலமையிற்சிறந்தார்:**—அதாவது கவித்திறத்திலே சிறந்தவர்; மகா [illegible] யார்; கற்பிற்சிறந்த கண்ணியவ [illegible] டதம் பாடிய அதிவீரராமபாண்டிய அரசர்க்கு உடன்பிறந்தாரின் மனைவி. அதி வீரராமபாண்டிய அரசன் மிகச்சிற்றின்பப்பிரியாக இருந்து நன்னெறி கடந்துதிரிதலை, அவரது காவியமாகிய நைடதத்துக்கு அபிப்பிராயம் சொல்லும் முறையினால், கண்டித்து அவரை நல்வழிக்குத் திருப்பிய நலம்பொருந்தியவர்கள்.

**கற்பிற்சிறந்தார்:**—பூதப் பாண்டியன் தேவியார், பார்ப்பன மருதியார் முதலிய பலர் விளங்கியிருக்கின்றார்கள். நமது நாட்டுப் பெண்கள் தமது கற்பைக்காத்துக்கொள்ளுதலில் மிக்கவீரமும் உறுதியும் காட்டியிருக்கின்றார்கள். இத்தகைய பெண் மணிகளாலேயே நமது நாடு பழம்பெருமையை யின்னும் வகித்து விளங்குகின்றது. மற்றைய மேல்நாடுகளில் இப்படிக் காண்பதரிது. இப் பெண்மணிகளுக்காகவே இராமாயணம் நைடதம் பாரதம் முதலிய பெரிய நூல்கள் எழுதப்பெற்றிருக்கின்றன. நமது தமிழ் நாட்டுப் பெண்மணிகள் பலருள் பார்ப்பனமருதியார் என்பார் ஒருகால் ஆலயத்தில் தெய்வம் தொழுதுவிட்டுத்திரும்பும்போது ஒரு அயோக்கியன் தன்னைக்காதலித்து வார்த்தையாடினனாக, உடனே இந்த அம்மையார் மனம் வெறுத்து, அவ்வூரில், அக்கிரமம் செய்தாரை விழுங்குவதற்கென்றுபூதம் அமைந்துள்ள பூதச்சதுக்கத்துக்கு நேரேசென்று, தன்னைவிழுங்கும்படி நின்று, "மண்டிணி ஞாலத்து மழைவளந்தரூஉம் பெண்டிராயின் பிறர்மனம் புகேன்", அதாவது உலகில் மழையையும் வருவிக்கக்கூடிய திறமைவாய்ந்த கற்பு நோன்புடைய பெண்ணுயிருந்தால், என்னை அன்னியன் கருதுதல் கூடாமே; நானோ என் மனத்தால் யாதும் கெட்டேனல்லேன்; ஆனால் ஒருவிடன் என்னை இச்சித்துப் பேசக்காரணம் தெரியவில்லை; என்னில ஏதோ குற்றமிருக்கிறது; ஆகையால் பூதமே என்னை விழுங்கிவிடு" என்றுசொன்னாள். அதற்கு அப்பூதம், "நீ கற்பரசி; நீ உன்மனதாரக் குற்றமற்றவள்; உன்னை விழுங்க என்னால் முடியாது; ஆனால் கணவனைத் தெய்வமெனத் தொழுதல் மாத்திரமேயன்றி தெய்வத்தையும் தொழுதற்கென்று கணவனில்லாமல் தனித்துப் போயினமை குற்றமாகலின், உன்னையொருவன் இச்சிக்கவும் நேர்ந்தது; ஆகையால் அதற்கு வேண்டிய பரிகாரத்தைசெய்து இனிமேல் புருஷனையே தெய்வமாகஎண்ணிப் பூவுலகில் அடையவேண்டிய நற்பேறுகளையடைந்துய்வாய்; போ" என்றுசொல்லிற்று. இப்படிப்பல பெண்மணிகள்விளங்கப்பெற்றதாகும் நமது தென்னாடு.

## சுதேசி.

நமது சுதேசத் தொழில்களையும் திருச்சி இஸ்லாமிய நெசவுச்சாலையையும் ஆகரிப்பதன் பொருட்டு ௨0 மாணவர்களைப் பயிற்றுவிப்பதாக ஏற்பாடாயிருக்கிறது. (ஒத்துழையாமையை யனுசரித்துப் பள்ளிக்கூடப் படிப்பைவிட்டிருக்கும் மாணவர்கள்) அதில் கைராட்டினநூற்றலும் கைத்தறி நெசவும் கற்றுக்கொடுக்கப் பெறும். இன்னும் பொதுவிஷயங்களையும் அவர்கட்குக் கற்றுக்கொடுக்கவும் ஏற்பாடு செய்யப்பெறும். பயிலுங்காலம் ஆறு மாதங்கள் தான். ஆறுமாதத்து முடிவில் ஒரு போட்டி பரிசை வைக்கப்பெறும். தேர்ச்சி பெற்ற மாணவனுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கப்படும். கீழ்க்காணப்பட்டிருக்கும் விதிகளை யநுசரித்து விண்ணப்பங்கள் பதிவு செய்யப்பெறும்.

௧. விண்ணப்பதார் பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவராக இருத்தல் வேண்டும்.

௨. அவருக்கு சாதாரணமாகத் தொழிலில் ருசியிருந்திருக்க வேண்டும்.

௩. சேர்த்துக்கொள்வதில் ஜாதி மத பேதங்கள் கவனிக்கப்படமாட்டா.

௪. சேர்த்துக்கொள்ளச் சம்பளமும் இல்லை.

௫. இருப்பிடமும் ஆகாரமும் இனமாக அளிக்கப்பெறும்; ஆனால், விண்ணப்பதாரர் தமது சொந்தப் பாத்திரங்களை வைத்துக் கொண்டு தமது ஆகாரத்தைச் சமைத்துக் கொள்ளல் வேண்டும்.

௬. இங்கிலீஷ் அறிவு அவசியமில்லை.

௭. விண்ணப்பதாரர் தமது சொந்த ஊரிலுள்ள இரண்டு கனவான்களிடமிருந்து, தமது நடத்தையைப் பற்றிய சர்டிபிகேட் அனுப்ப வேண்டும்.

௮. பயிலுங் காலம் முடிந்த பிறகு, இன்னும் ஆறுமாதத்திற்கு ஒவ்வொரு மாணவரும் அந்த தொழிற்சாலையில் வேலைசெய்யவேண்டும்.

விண்ணப்பங்களும் மற்ற தகவல்களும் திருச்சி கண்டோன்மெண்ட் டாக்டர் ராஜன் மேல்பார்வையில் ஸ்ரீ சௌம்யநாராயணன் பி. ஏ. அவர்கள் விலாசத்துக்கு அனுப்பப்பெறல் வேண்டும்.

டி. எஸ். எஸ். ராஜன்.



## மதுவிலக்குக் கண்ணி.

குடியரசு வருவதற்குக் குடிதொலைய வேண்டுமென்று
படியிலுள்ள பெரியோர்கள் பல்காலும் சொல்வதனால்,
கள்ளைக்குடிக்காதீர்; அன்பர்களே!
கஞ்சாவைத் தின்னாதீர்; நண்பர்களே!! (௧)
கோடீசு வரப்புக்கள் குடியினால் சிறையடைந்து
வாடிவருந்தியுயிர் மாய்ப்பதுவுந் தெரியீரோ. கள்ளைக் (௨)
லக்ஷப்ர புக்களெலாம் லச்சையின்றிக் கட்குடித்துப்
பிச்சை யெடுப்பதுபோல் பேதைமையும் வேறுளதோ. கள்ளைக் (௩)
கொள்ளைகொலைகளவு கொடியசண்டை சச்சரவு
கள்ளரல்வி ளைவதுவுங் கண்ணாரப் பார்க்கிலீரோ. கள்ளைக் (௪)
வெள்ளாடு பச்சிலையை மேய்வதுபோல் மூளைதனைக்
கள்ளான தரிக்குமென்று கற்றறிந்தோர் கூறுவதால், கள்ளைக் (௫)
செல்வங் குறைந்துவிடும் தேகமெலாஞ் சோர்ந்தழியும்
கல்வியும்பா ழாகிவிடும் கட்குடியர்க் காதலினால், கள்ளைக் (௬)
சொல்லாத பலநோயாற் சோர்ந்தழிந்து நடைபிணம்போல்
தள்ளாடி விழுவதுவும் தான்மதிப்போ பூமியிலே. கள்ளைக் (௭)
ஆங்கிலர்கள் இந்நாட்டில் அடிவைத்த நாள்முதலே
தீங்குசெயுங் கள்ளுக்கடை செழித்துவ ளர்ந்ததையா. கள்ளைக் (௮)
சாராயம் ப்ராந்தியின் தாழ்வுதரும் விஸ்கியபின்
பூராவும் லகிரிவஸ்து புண்ணியர்கள் உண்ணார்கள். கள்ளைக் (௯)
குடியைக்கெ டுக்குங்குடி குடும்பத்தைப்பா ழாக்குங்குடி
அடுத்தவரை அழிக்குங்குடி ஆழ்நரகில் அமிழ்த்துங்குடி. கள்ளைக் (௧0)
கள்ளையும் கஞ்சாவையும் காப்பியையும் தேயிலையும்
எல்லாக் குடிகளையும் இனியேனும் தொலைத்திடுவீர். கள்ளைக் (௧௧)
அமெரிக்கர் எல்லாரும் அடியோடே கட்குடியை
அமரிக்கை யாகவிட்ட அதிசயமுங் கேட்டிலீரோ. கள்ளைக் (௧௨)
குடியே தொழிலாகக் கொண்டருஷ்யாக் காரரெலாம்
அடியோடு கட்குடியை அகற்றியதும் தெரிந்திலீரோ. கள்ளைக் (௧௩)
பொதுவான ஸபைகளிலே போய்ப்பேச வெட்கமுற்று
மதுபானம் செய்தவர்கை வாய்பொத்திப் பேசுவதால், கள்ளைக் (௧௪)
நாட்டார்கள் கூட்டத்திலோர் நாளும்பனை ஏறுவது
கூடாதெ னத்தடுத்த கொள்கையைநீர் அறியீரோ. கள்ளைக் (௧௫)
பாராத இடந்தனிலே பயந்தொளித்துக் குடித்தாலும்
ஊரார்எல் லாருமதை உடனேயறிந்துகொள்வர். கள்ளைக் (௧௬)
கோணாத நட்புரிமை கொண்டவரும் குடிப்பவரைக்
காணாத விடந்தனிலே கட்குடிய னென்று சொல்வர். கள்ளைக் (௧௭)
பூனைதன் கண்மூடிப் புவியிருட்டா யினைப்பதுபோல்
காணாது குடித்தாலுங் கட்டாயம் தெரிந்துவிடும். கள்ளைக் (௧௮)
பனைமரம் வைத்திருக்கும் பாக்கிய வான்களெல்லாம்
இனியேனும் தீயகள்ளை இறக்கக் கொடுக்காதீர். கள்ளைக் (௧௯)
குத்தகை எடுப்போர்கள் குணவான்க ளாயிருந்தால்
எத்துணைபணம் வந்தாலும் இனியெடுக்கக் கூடாது. கள்ளைக் (௨0)
பெற்றோர் வெறுத்திடுவார் பேசுவோரெல் லாம்வெறுப்பார்
கற்றோர்வெ றுப்பரிந்தக் கட்குடிக்கும் மக்கள்தமை. கள்ளைக் (௨௧)
ஏழையெ ளியவரை எப்போதும் தரித்திரத்தில்
பாழாக்குங் கள்ளுக்கடை பண்புடையோர் வைப்பர்கொலோ? கள்ளைக் (௨௨)
மன்னன்ஜி ஹாங்கீரும் வளம்பெருகும் நம்நாட்டை
அன்யாயக் குடிகுடித்து அன்னியர்கைப் பறிகொடுத்தான். கள்ளைக் (௨௩)
எத்துணையோ கதையிதுபோல் இருபதுநாள் பேசிடலாம்
அத்துணையுஞ் சொல்லவிப்போ தவகாச மின்மையினால் (௨௪)
கள்ளைக்குடிக்காதீர்; அன்பர்களே!
கஞ்சாவைத் தின்னாதீர்; நண்பர்களே!!

வந்தேமாதரம் மஹாத்மா காந்திக்கு ஜேய்.

ஒரு நிருபர்.

## வேந்தன்பட்டி.
### தனவைசிய வாலிபர்களுக்கு ஓர் விஞ்ஞாபனம்.

அன்பார்ந்த சகோதரர்களே!

நம் ஜாதியபிமானங்கொண்டு சமூகம் முன்னேற வேண்டித் தன்னலம் கருதாமலும் இகழ்ச்சி புகழ்ச்சிகளை விரும்பாமலும் நம்மவர் வசிக்கும் ஊர்கள் தோறும் பிரசாரம் செய்து மகாநாட்டைக் கூட்டித் தாங்கள் எடுத்த கோரிக்கையை நிறைவேற்றி வைத்து மகிழ்வித்த சமூக ஊழிய சங்கத்தாருக்கு நாமெல்லோரும் மிகுந்த நன்றிபாராட்டக்கடமைப்பட்டிருக்கிறோம். இனி ஊழிய சங்கத்தாருக்கு ஒத்தாசையாகவும் ஆங்காங்குள்ள விஷயங்களை சங்கத்தார் தெரிந்துகொள்ளும் பொருட்டாகவும் ஒவ்வொரு ஊரிலும் வாலிபர் சங்கங்களுண்டாகி மிகவும் ஊக்கத்தோடு ஒற்றுமையாக நடைபெற்றுவருவது யாவரும் அறிந்த விஷயம். ஆகவே, நமது ஊரிலும் வாலிபர் சங்கம் உண்டாகவேண்டியது அவசியமன்றோ? நிற்க; ஏற்கனவே ஒற்றுமை சிறப்பி எக்காரியத்திலும் முன்னின்று நடத்தும் நமது ஊர் வாலிபர்கள் இச்சங்க ஸ்தாபன விஷயத்தில் இதுகாறும் கவனியாதிருந்ததென்ன? நண்பர்களே! சகோதரர்களே!! நம்மூரிலும் வாலிபர் சங்கம் ஏற்படுத்தி நடைபெறுமாறு இம் மலாய் நாட்டில் வசிக்கும் நமது ஊர் நண்பர்கள் ஆசையோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இனி தாமதியாது வாலிபர் சங்கத்தை ஸ்தாபித்து நடத்தி வருவீர்களாக. நமதுநந்தியெம்பெருமான் திருவருள் புரிவார்.

நா. லெக்ஷ்மணன்செட்டி.


## தனவைசிய ஊழியன்.
### சந்தா விபரம்.

இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஆ ஒன்றுக்கு ... ௫—0—0
சிங்கப்பூர் முதலிய வெளி நாடுகளுக்குஆ ஒன்றுக்கு ௭—0—0
தனிப்பிரதி ஒன்றுக்கு ... 0—௨—0

### விளம்பர விபரம்.

மாதம் ௧-க்குபத்தி-௧-க்கு ... ௨0—0—0
ஷை அரைப்பத்திக்கு... ௧௧—0—0

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்,
காரைக்குடி.

சொ. முருகப்ப செட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

